உ

# திருவருணைப் பாடற்றிரட்டு



ஸ்ரீ அண்ணமலையார்



உ

சிவமயம்.

மகான் - வண்ணச்சரபம்

அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள் அருளிய

# திருவருணைப் பாடற்றிரட்டு

என்னும் இந்நூல்

இராட்சச ஆண்டு, கார்த்திகை 1-ஆம் நாள்

(19—11—75) திங்கட்கிழமை காலை

**திருவண்ணாமலை தீப விழாவின் 8-ஆம் விழாவன்று**

புரிசை - பெருஞ்சொற்கொண்டல்

திரு. S. முருகேச முதலியார் அவர்கள் தலைமையில்,

கோவை - சிரவை யாதீனம், கௌமார மடாலயத் தலைவர்

தவத்திரு. சுந்தர சுவாமிகள் அவர்களால்

வெளியிடப்பெற்றது.

பதிப்பாளர் :

திருநெல்வேலி - அரசன் கம்பெனி அதிபர்

திரு. S. அருணகிரி நாடார் அவர்கள்.

1975

உ

குருவே துணை

# திருவருணைப் பாடற்றிரட்டு




ஆசிரியர்

திருநெல்வேலி மகான் வண்ணச் சரபம்

அருள்மிகு

திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும்

**தண்டபாணி சுவாமிகளவர்கள்.**



பதித்தவர்

-யர்திரு அரி. அ. சுப்பையாநாடார் அவர்களது

மகனார்

திரு சு. அருணகிரி நாடார் அவர்கள்

அதிபர், அரசன் கம்பெனி, திருநெல்வேலி சந்திப்பு

சிவமயம்

தூத்துக்குடி சிவத்திரு.

# அரி. அ. சுப்பையா நாடார் அவர்கள்

## வாழ்க்கைக் குறிப்பு



"நயனொடு நன்றிபுரிந்த பயனுடையார் பண்பு பாராட்டும் உலகு" சிவத்திரு அரி.அ. சுப்பையா நாடார் அவர்கள் சிவகாசியில் திரு. அரி. அய்ய நாடார் மீனுக்ஷி அம்மையார் இவர்களது தவப் புதல்வனுக 1871ம் ஆண்டு மார்ச் 10 உ அவதரித்தார்கள். சிவகாசி மிஷன் பள்ளியில் கல்வி பயின்ருர்கள் அவர்களுக்குக்கல்வியில் மிகுந்த ஆர்வமும் கணக்கிலும் தமிழிலும் தனித் திறமையும் இருந்தது. அதனைப் பள்ளியை விட்ட பின்பும் சுய முயற்சியால் வளர்த்தமையால் எண்ணும் எழுத்தும் கண்ணெனத் திகழ்ந்து அவர்கள் வாழ்க்கையை வளம் பெறச் செய்தது.

மிக இளமையிலே அவர்கள் தந்தையார் செய்து வந்த மர வியாபாரத்தில் ஈடுபட்டு தனது தளரா முயற்சியாலும் திறமையாலும் வியாபாரத்தைப் பெருக்கிப் பெரும் பொருள் ஈட்டினுர்கள். சிவகாசி திரு க. சொ. ஞானகிரி நாடார் அவர்கள் திருமகளார் அன்னம்மாள் அவர்களை வாழ்க்கைத் துணைவியாக ஏற்று வள்ளுவர் வகுத்த நெறியில் இல்லறமாக நல்லறத்தை இனிது நடத்தி வந்தார்கள்.

வளர்ந்து வரும் வியாபாரத்தை மேலும் விரிவடையச் செய்யும் நோக்கத்துடன் தூத்துக்குடியில் தனது காரியாலயத்தை அமைத்துக் கொண்டு குடும்பத்துடன் அங்கு குடியேறினுர்கள். அது முதல் வியாபாரம் மென் மேலும் பெருகி வர கொல்லம், தென்மலை, கோவில்பட்டி முதலிய ஊர்களிலும் கிளை ஏற்பட்டன.

சிறுவயதில் குருமூலமாகத் தீக்ஷைபெற்று அனுஷ்டானம் ஆலயவழிபாடு முறையாகச் செய்து வந்தார்கள். திருவண்ணாமலை கார்த்திகை தீப தரிசனத்தை ஆண்டு தோறும் சென்று தெரிசித்து வருவதை ஒரு விரதமாகக் கொண்டார்கள். திருக்குறள், கம்பராமாயணம், ஞான வாசிட்டம், கைவல்யம், திருவாசகம், தேவாரம் முதலிய நூல்களில் பெரிதும் ஈடுபாடுடையவர்கள். சாதுக்களுக்கு அன்னமிட்டு உபசரிப்பதை ஈசுவர ஆராதனையாகக் கருதி பணிவுடன் புரியும் கட்டுப்பாடுடையோர். தூத்துக்குடியில் ஒரு மடம் அமைத்துப் பக்தி பிரயோகம், ஞானம் இவற்றில் சிறந்த சாதுக்கள் பலரை அழைத்து வந்து அமரச் செய்து அவர்கள் நல்லாசியும் பாராட்டுதலும் பெற்றார்கள்.

"தாமின்புறுவது உலகு இன்புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தோர்"

என்ற பொய்யாமொழிக்கிணங்க தன்னுடைய உற்றார் உறவினர்களுக்கும் மற்றும் தன்னை அண்டின பலருக்கும், வியாபார நுணுக்கங்களைக் கற்பித்து, அவர்கள் பல தொழில் களை மேற்கொண்டு முன்னேற்றமடையத் தூண்டுகோலாக அமைந்தார்கள். சுற்றந்தழால் என்பது அவர்கள் தனிப் பண்பு. அவர்களுக்கு நான்கு புதல்வர்களும் நான்கு புதல்வி களும் உண்டு. எல்லோரும் அறிவறிந்த மக்களாகத் திகழ வேண்டும் என்று உயர்ந்த கல்வி பயிலக் கவனம் செலுத்தி னார்கள். மேலும் அவர்கள் அனைவரும் செல்வச் சிறப்புடன் பிறர் நலம் பேணும் பெருந்தமையாளராகவும் விளங்க வித்திட்டார்கள். அதன் காரணமாக அவர்கள் வழித் தோன்றல்கள் யாவரும் இன்றும் மக்கள் சேவையில் பொது நலத் தொண்டில் மாண்புடன் ஈடுபட்டிருப்பதைக் காணலாம்.

கட்டிடக் கலையில் அவர்கள் ஒரு சிறந்த நிபுணர் என்றால் மிகையல்ல. குறைந்த செலவில் எல்லாவித வசதிகளும் நிறைந்த அழகிய வீடுகள், குடியிருப்புகள், பள்ளிக்கூடங்கள், கடைகள் முதலியன எண்ணிறந்தன கட்டியுள்ளார்கள்.

அவர்கள் தெய்வ பக்தியும் சேவை மனப்பான்மையும் அவர்கள் ஈட்டியசெல்வத்தில் ஒருபகுதியைத் திருவண்ணாமலை

அருணசலேஸ்வரர் பெயரால் ஒதுக்கி பல நல்லறங்கள் செய்வதற்கு ஏதுவாய் இருந்தன. தூத்துக்குடியில் சித்தி விநயகர் ஆலயம் என்று ஒரு அழகிய கோவில் கட்டி அதற்கு நந்தவனமும் அமைத்து நித்திய பூஜைகள் ஒழுங்காக நடைபெற ஏற்பாடு செய்துள்ளார்கள். திருவண்ணமலை வடக்குரத வீதியில் சுப்பையா திருமடாலயம் என்ற பெரிய கட்டிடத்தை எடுப்பித்து, விழாக் காலங்களில் சாதுக்களுக்கு அன்னமிடவும், பக்தர்கள் கூடி விழாப் பொலிவு கண்டு வணங்கவும், ஆவன செய்து வைத்தார்கள். மேலும் திரு அண்ணமலை, திரு அருணசலேஸ்வரர் ஆலயத்தில், தகிலடைந்திருந்த ஆயிரக்கால் மண்டபத்தைத் தனது மேற் பார்வையில் பழுது பார்த்தும், பூர்த்தியாகாமல் இருந்த திருவண்ணமலை சக்தி விலாஸ் மண்டபத்தைத் திருப்பணி செய்தும் தந்தார்கள்.

அவர்கள் தர்ம சிந்தனையின் விளக்கமாக அமைந்தது சுப்பையா தர்மநிதி. நிதியின் பெயரில் பல லக்ஷ ரூபாய் மூல தனமும், பற்பல சொத்துக்களும் சேர்ந்தன. மேற்படி தர்மநிதி யிலிருந்து தூத்துக்குடி சுப்பையா வித்யாலயம்,அன்னம்மாள் மாணவிகள் இல்லம்,அன்னம்மாள் B.T கல்லூரி, திருவண்ண மலை அருணசலேஸ்வரர் 'திருவிழா மண்டகப்படி தெப்போற் சவம் முதலியனவும் செவ்வனே நடை பெற்று வருகின்றன. திரு. சுப்பையா நாடார் அவர்களைப் பின்பற்றி அவர்கள் சந்ததியாரும் ஷெ அறங்களைத் திறம்பட ?நடத்திப் பொது மக் களின்பாராட்டுதல்களுக்கும் நன்மதிப்பிற்கும்உரியவர்களாகத் திகழ்கிருர்கள்.

இத்தனை செல்வங்களுக்கும் சிறப்புக்களுக்கும் புகழுக்கும் இடையிலும் திரு. சுப்பையா நாடார் அவர்களின் உள்ளம் இறைபக்தியில் ஆழ்ந்து தோய்ந்து நின்றது. தேவாரப் பாடல்களைத் தேன் என அனுபவித்து வந்தார்கள். திருவாச கத்தை உருகிப் பாடும் போது விண்மாரியென இரு கண் மாரி பொழிய நெக்குருகி நிற்பார்கள். ஓதுவாமூர்த்திகளை உள்ளன் புடன் உபசரித்துப் பராமரித்து வந்தார்கள்.

"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன்,
பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே,
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே."

என்ற திருவாசகத்திற்கு ஏற்ப இறையருளையே குறிக்கோளாக நினைந்து உலக பந்தங்களை உதறித் தள்ளித் துறவி நெறியை மேற்கொண்டு திருவண்ணாமலை சென்று சுப்பையா திருமடாலயத்தில் எழுந்தருளி ஈசுர பக்தியிலும் அடியார்கள் வழிபட்டிலும் அமைதி கண்டார்கள். 10 ஆண்டு காலமாக அந்நெறியிலே நின்று 1943ம் ஆண்டு அக்டோபர் மீ 21உ திருவண்ணாமலையாரைத் துதி செய்த வண்ணமே பொன்னுடலை நீத்து அருணாசலேஸ்வரர் திருவடிகளை அடைந்தார்கள்.

"ஆதிநடம் ஆடுமலை அன்றிருவர் தேடுமலை
சோதிமதி ஆடரவம் சூடுமலை - நீதி
தழைக்குமலை ஞானத் தபோதனரை வாவென்(று)
அழைக்குமலை அண்ணா மலை"

ஜோதி வடிவான திருவண்ணாமலை சுப்பையா நாடார் என்ற ஞான தபோதனரையும், அதன் அருள் நெறியில் ஏற்றுக் கொண்டது. திருவண்ணாமலை பச்சையம்மன் சன்னதிக்கு எதிராக உள்ள அழகிய இடத்தில் அவர்கள் உடல் சமாதி செய்யப் பட்டது. அதன் சானித்யம், இன்றும் அங்கு செல்லும் பக்தர்களுக்குத் திருஅருளை வாரி வளங்குகிறது. எளிமையும் ஒழுக்கமும் உழைப்பும் சேவையும் பக்தியும் தனி சிறந்து விளங்கிய அவர்களது வாழ்க்கை மனித குலத்திற்கு, நல்ல எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது என்பது திண்ணம்.

அவர்கள் மருமகன் என்ற முறையில் அவர்களோடு ஓய்வு நேரங்களில் திருவண்ணாமலைத் திருமடாலயத்தில் நெருங்கிப் பழகும் தனிவாய்ப்பும் பெருமையும் எனக்குக் கிட்டியது. அவர்களுடன் ஸ்ரீ ரமணரிஷி முதலிய சாதுக்களைத் தெரிசித்து அவர்களது அருளுரைகளைக் கேட்கும் பேறு பெற்றேன். சுப்பையா நாடார் அவர்கள் அன்பும் பண்பாடும், என்னைப் பெரிதும் கவர்ந்து அவர்கள்பால் ஈடுபடச் செய்தது.

மதுரை
5 – 11 – 74

*S. நடராஜ நாடார்,*
மதுரை மாவட்ட ஓய்வு பெற்ற நீதிபதி,
*மதுரை-2.*

குருவே துணை

# முன்னுரை

## வெண்பா

திருநெல்லை யூரிற் றிகழ்தண்ட பாணிப்
பெருமான், திருவருணைப் பேரூர் - முருகோனை
ஈசனுடன் அம்பிகையை ஏத்துதுதிப் பாடல்களை
நேசமுடன் போற்றல் நெறி.

திருவருணை என்று போற்றப் பெறுகின்ற திருவண்ணாமலைத்தலம், சோணாசலம், சோணவெற்பு, அருணாசலம், அருணகிரி என்பது போன்று பல திருப்பெயர்களைக் கொண்டதாகும். அருணம், சோணம் என்ற பெயர் நெருப்பினைக் குறிக்கும். பிரமனும் திருமாலும் காண முடியாமல் இறைவன் தீமலையாய்த் தோன்றிய காரணம் பற்றி வந்த பெயர்களாகும். எல்லாத் தலங்களும் உலகில் ஒவ்வொரு சிறப்புப் பற்றி அமைந்தனவேயாகும், எனினும் மேலே கூறிய சிறப்புப் பற்றிக் கார்த்திகை மாதத்தில், தீபக் காட்சி மலைமுகட்டிற் காணப் பெறுவது திருவருணைத் தலத்துக்கேற்பட்ட தனிப் பெருமையாகும். அல்லாமலும்,

முத்திப்பேறு வழங்கும் தலமாக ஒரு நான்கு தலம் கூறுவர். அவை, பிறக்க முத்தி தருவது திருஆரூர். இறக்க முத்தியீவது [காசி, சென்று கண்டு வணங்க வீடு தருவது திருத்தில்லையென்ற சிதம்பரம். ]நினைத்தாலே முத்தி நல்குவது திருவருணையாகும். இவற்றுள் திருவாரூரில் பிறப்பதென்பது நம் செயலன்று. காசியிலிறப்பதென்பது எல்லோராலும் ஆவதில்லை. தில்லையிற் போய்த் தெரிசிப்பது முயன்று பெறுவதாகும். இருந்த இடத்திலிருந்து எப்போதும், எல்லோருக்கும் திருவருணையை நினைப்பது மிக எளிது. அத்தகைய திருவருணையைப் பற்றிப் பலர் துதித்துள்ளனர்.

அவருள், குகைநமசிவாயர், அவர் சீடர் குருநமசிவாயர் ஈசானதேசிகர், திருப்புகழ் பாடிய அருணகிரி நாதர் ஆகியோர் மிகச் சிறப்புடையர். அண்மையில் வாழ்ந்த ரமணமகரிஷி சேஷாத்திரி சுவாமிகள் என்ற இருவரையும் அறியாதார்

இரார். இது போற் பல அருளாளர், புலவர்கள் வாழ்ந்த தலம் திருவருணை. அருணகிரியந்தாதி-குகைநமசிவாயரியற்றியது சிவப்பிரகாசரியற்றிய "சோணசைல மாலை" கற்பனை வளம் சிறந்தது. தலபுராணம், அந்தகக்கவி - வீரராகவ முதலியாரியற்றியதாகும். அது போன்று பல அரிய தமிழ் நூல்களைக் கொண்ட திருத்தலம் திருவருணை.

திருநெல்வேலியில், தமிழ் விகாரி ஆண்டு கார்த்திகை மாதம் 14ம் நாள் சனிக்கிழமை 28-11-1839 அத்த உடுவில் தோன்றியவர். அருள்மிகு வண்ணச்சரபம் **தண்டபாணி சுவாமிகள், திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்** என்ற வேறு இரு பெயரும் வழங்கப் பெற்றவர். இவர் தல வழிபாடு செய்யு முறையில், திருவருணை சென்று, ஈசான தேவர் திருமடத்தில் தங்கியிருந்தனர். அன்றிரவு முருகப் பெருமான் இவரது மனவெளியில் சுப்பிரமணியக் குருக்களென்ற பெயரில், சிவவேதியவடிவிற் தோன்றி, நீ நமது கோபுரத்துக்கு வருக என்றருளினர். மறுநாட் காலை தமது நியமமுடித்து அண்ணாமலையாரையும், உண்ணாமுலையம்மையையும் வணங்கி, கோபுரத்திளையனார் திருமுன் வந்த சமயம், !முகப்பில் சுவர் வைத்து மறைக்கப் பட்டு, வேறு சிறு வாயில் வைத்து சில சாதனங்கள் உள்ளே சேமிக்கப்பட்டிருந்தது கண்டு இவர் மனம் வருந்தினர்.

அக்கால், சந்துமண்டி இராமசாமி முதலியாரென்பவர் சுவாமிகளன்பராயிருந்தவாற்றால், அவர் மூலம் சுவரை எடுப்பித்தனர். வௌவாற் கூட்டம் வெளியேறின. இருள் மூடிய இடம் வெளிச்சமாயிற்று. கோபுர மாடத்தில் முருகப் பெருமான் திருவுருவம் காணப்பட்டது. இடத்தைத் தூய்மை செய்து தாமே வழிபடலாயினர். அருணகிரிநாதர் கோபுர மீதிருந்து, கீழே உயிர்விடக் குதித்த போது, முன்வந்து காட்சித் தந்தருளிய மூர்த்தம் அது என்ற பேரவாக் கொண்டனர் முருகனுக்கு இன்றியமையாத வேலாயுதம் இல்லை. தன் வழிபாட்டிலிருந்த வேலாயுதம் சாத்த முடியாதபடியால் பக்கத்தில் சார்த்தினர். அது இன்றும் அப்படியேயிருப்பது காணற்குரியது. ஆனால் இச் செய்தி அறிந்தவர் இன்று அங்கில்லை. இந்நூலில் உள்ள இரு பதிகங்களில், வேல்

இல்லாதிருந்தும் பின் அணியப் பெற்றதும் கூறியுள்ளது காணலாம்.

சுவாமிகள் அங்கு தங்கிய போது பாடிய பாடல்களின் தொகுப்பே இந்த நூலாகும். இதன்றி 'சகத்திர தீபம்'' என்ற ஆயிரம் பாக்களைக் கொண்ட நூல் ஒன்றுண்டு. வௌவால்கள் நிரம்பியிருந்த இடத்தில் தீப ஒளி மிகுதி யிருப்பின் அருளொளி வீசுமென்ற கருத்தில், தமிழ்ப்பாடலில் ஆயிரம் ஒளித்தீபமேற்றிப் பாடினர். அது அடுத்து வெளி வரும். அவ்வாறு சகத்திர தீபப்பனுவல் இயற்றும் போது ஒரு பாடலில்

'சோறிட்ட கையினர் வாழருணாபுரித் தொல்சிகரிக்
கூறிட்ட தான வடபாதிக் கோயிற் குருபரனே
சீறிட்ட வாவற் குலம்ஓட ஆயிரம் தீபம்வைப்பான்
நீறிட்ட மேனியும் தண்டமுந் தோற்றமுன் நின்றருளே'

என்று கூறியதாலறியலாம். திருவண்ணாமலையில் வரும் அன்பர் யாசகர்கட்கு காத்திருந்தும் உணவளிப்பவர்களுண்டு என்பதை அன்றே நேரிற் கண்டு மகிழ்ந்து கூறியதறிந்து இன்புறற்பாலது. 'குருவாய்வருவாய் அருள்வாய்குகனே' என்று அநுபூதி நூலில், அருணகிரிநாதர் வேண்டியவாறே நீறிட்ட மேனியும் தண்டரும் தோன்ற முன்னின்றருள் என வேண்டுகின்றனர். இவ்வாறு தண்டபாணி சுவாமிகள் சகத்திரதீப நூல் பாடும் போது, ஒரு நாள் கனவில், முன் கூறிய இராமசாமி முதலியார் ஓர் காட்சி கண்டனர்.

கோபுரத்திளையரான முருகப் பெருமான், சீவதிசையில் தனது இரண்டு திருவடிகளையும் தொங்க விட்டிருக்கவும் அவை கீழே உட்கார்ந்துள்ள சுவாமிகளின் சிரசின் மீது பொருந்தியிருக்கவும் கண்டு வியந்து மறு நாட் காலை வந்து சுவாமிகள் பாற் கூறிப் பாராட்டினர். அது கேட்டவுடன் மகிழ்வோ, பெருமிதமோ உண்டாக வில்லை. மாறுகவூடலான வருத்தந்தான் உண்டாயிற்று. 'என்னை உலக மக்கள் உன் அடிமை என்பதாக முருகதாசர் என்று அழைக்கின்றனர். வழங்குகின்றனர். ஆனால் அதற்கேற்ற படி மனதில் திருவருள் ஒளி காணப்பட வில்லையே? ஏன் உனக்கு இந்தக் கபட விளை யாடல், என்று, அன்புக் காதல், எளிமை இனிமையமையப் பாட்டொன்று கூறினர்.

ஆண்டாய் எனையென்(று உலகோதக் கேட்பதொன் றன்றி நெஞ்சம்
தூண்டா விளக்கில் அவிர்ந்டேக் காண்கிலன் தொண்டரெல்லாம்
கூண்டார்க்கும் தென்னருணபுரிக் கோபுரம் கொண்டவனே
ஏண்டா உனக்கிந்த வஞ்சம்இப் போதுவந் தென்முன் நில்லே'

என்பது காண்க அவ்வாறு தங்கிப் பாடி முடிந்தது. அடியவர் கூட்டம் பெருகி வரலாயின. தியானசெபம் புரிய முடியாமையால், ஷி இராம முதலியார் மூலம் மலையின் மீது சிறு ஆச்சிரமம் ஏற்படுத்தித் தனித்து வாழ்ந்தனர். வழிபாடு – உணவு ஆகியவற்றை முதலியாரே செய்து வந்தார். அவ்வாறிருக்கும் சமயம ஒவ்வொர் காலம் இரவிற் புலிவந்து வெளியே உறுமும் உலாவும், இதனுல் சுவாமிகள் அஞ்சவில்லை. 'வல்லிருப்புத் தடிச்சமனுவுருக் கொண்டோனும்– மாயவனே எனும் தெளிவில் மயங்குருதார்'' என்றவாறு, பலவாறு திருவருட் செயலுக்கும் புறம்பானவையல்ல, முருகன் திருவுள்ளப்படியே எதுவும் நிகழும் என்றுணர்ந்தவராதலின், அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்சவருவதுமில்லை என்றிருந்தனர். ஓர் நாள் கோபுரத்திளையனுரைக் காணவிரும்பி மலையினின்றும் வந்து வணங்கினர். இரவு கோபுரத்திலே முருகன் திருமுன் மண்டபத்திலேயே தங்கிவிட்டனர்.

அன்றிரவு புலி, குடிலுக்குள் நுழைந்து விட்டது. அங்கு காலையில் வழிபாட்டினை முடித்துச்சென்ற போது புலிக்காலின் அடிச்சுவடு புதியன கண்டனர். எப்படியும் புலி உள்ளே நுழையும், ஊறு நேருமென்ற கருத்தினுல், தன்னிடம் வரச் செய்து காத்தனன் முருகன் என்று அறிந்து வியந்தனர். மகிழ்ந்தனர். இவ்விவாத்தை, இது போன்ற விபத்து வேருென்று நிகழ்ந்த போது, இதை நினைந்து திருவருட் கருணையைப் போற்றினர்.

தென்னருணைப் புலி குகையிற் பிடியசமற்காத்து' கல் விழுந்திடாதபடி காத்த தெய்வம் துணையே'' என்பர். தெய்வத் துணைப்பதிகத்தில் இப்படிப் பல விபத்துகளைக் கூறியறிவிக்கின்றது காணலாம். பழனித்திருவாயிர நூலின் முத்தப் பருவத்தில், ''வேங்கையனுகல் முதற்சொல் அவமிருத்தாயிரம் முன் விலக்கியதும்'' என்று நினைவு கூர்ந்து திருவருளைப் பாராட்டுகின்றனர். திருநாவுக்கரசு நாயனுர், நஞ்சமுதாக்கி 'வைத்தார் நனிபள்ளியடிகளாரே என்றும், கல்லிருேடெளைப் பூட்டி

அரங்கையர் ஒல்லை நீர்புக நூக்க, என் வாயினால் நெல்லுநீள் வயல் நீலக் குடியான், நல்லநாமம் நவிற்றி உய்ந்தேன் என்றும். அருளியதை நாம் நினைவு கூறவுள்ளது.

'செந்திற் பதியில் திருவருணைக் கோபுரத்தில்
மந்தியுலாம் சோலை மயிலவெற்பில் - வந்தித்துச்
செவ்வேலைக் கண்டோர், திருப்புகழோன் சிந்தையினுக்கு
எவ்வேலை யுமினியோ ரே.

என்பது தனிப்பாடல் ஒன்று.

தன் அபிமானத் தலங்கள் மூன்றில் ஒன்ருக கோபுரத் திளையனர் சந்நிதி ஒன்றென்கின்றனர். இங்கிருந்த போது வேலலங்காரம் மயிலலங்காரம் ஆறெழுத்தலங்காரமாதியன பாடினர் என்பதும், வேறு பல அநுபவங்கள் நிகழ்ந்ததும் வரலாற்றினல் அறியலாம்.

இதனைப் பதிக்கும் போது, உடனிருந்து ஒப்புநோக்கியவர் புலவர், ஆசிரியர், பலநூலாசிரியர் திரு சிவதாசன் என்ற ஆறுமுகனரவர்கள். இதனை அழகுறப் பதித்துத் தந்தவர்கள் திரு. T. K. கணபதிப் பிள்ளை அவர்கள். இவர்கள் இருவரும் சிரவணபுரம் கௌமார மடாலயம் தலைவர் தவத்திரு சுந்தரசுவாமிகளிடத்துப் பேரன்புடையவர்கள். சுவாமிகளவர்களும், இப்பதிப்புக்குப் பேராதரவு தந்தவராவார்கள் இத்தகு பேரன்பும், தொடர்பும் உடைய அன்பர்கட்கு என் மனமுவந்த நன்றியையும் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் திருவருளை நினைந்து வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்துள்ள வரலாற்றினல் திரு. நாடாரவர்கள் அவரது முன்னேர்கள் செய்த அறப்பணி பற்றிய விவரம் அறியலாம்.

நெல்லிக் கனியிரண் டன்னபொற் கொங்கை நிலவுதெய்வ
வல்லிக்கும் கான மறத்திக்கும் கேள்வன், வயற்புனலில்
அல்லிக் களைகொள் அருணையின் கோபுரத்(து) அண்டினர்க்குச்
சொல்லித் தரும்எழுத் தாறலங் காரச் சுகந்தருமே.

(தண்டபாணி சுவாமிகள் ஆறெழுத்தலங்காரம்)

இங்ஙனம்,

**தி.செ. முருகதாச சுவாமிகள்**
கௌமார மடாலயம்,
**திருவாமாத்தூர். அ - நி.**
விழுப்புரம் வழி

தெய்வமே துணை

## பதிப்புப் பாயிரம்

சிரவணபுரம் – கௌமார மடாலயம் தலைவர்

தவத்திரு. சுந்தர சுவாமிகள் அவர்கள்

பாராட்டுக் கவி

### வெண்பா

சந்தக் கவிச்சரபன், தண்டபா ணிப்பெரியோன்
முந்தஅரு ணைப்பேர் முதுபதிதோய் – கந்தப்
பெருமானும் கோபுரத்துப் பெம்மானைப் போற்றித்
தருபாட லின்தொகுப்பி தாம். 1

நெல்லைப் பதியில் நிகழரசன் கம்பெனியார்
எல்லையிலா அன்பர் இசைகொடையார் – நல்ல
அருணகிரி யார்,தந்தைக் கான உரிமைப்
பெருநினைவா கப்பதித்தல் பேறு. 2

அறப்பணிகள் கோடி அநுதினமும் செய்யும்
திறத்தர் அருணகிரிச் செல்வர் – சிரத்தையுடன்
இந்நூல் பதித்தார் இனியும் பதிக்கவுள்ள
நன்ஞானன்பர் வாழ்க நனி. 3

---

திருவாமாத்தூர் - கௌமார மடாலயத்தலைவர்

தவத்திரு. தி. செ. முருகதாச சுவாமிகள் அவர்கள்

# பாராட்டுக் கவி.

வெண்பா

திருநெல்லை யுரிற் றிகழரச நற்பேர்
வருமோர் தொழிற்சாலை வைத்துப்—பெருமாண்(பு)
அமைய நடத்தும் அருணகிரி நாடார்
இமையமொப்பார் மெய்ப்பத்தி யில்.

சுப்பையா என்றுலகம் சொல்லவுற்ற தந்தையினை
ஒப்பஅறம் பேணும் உயர்வினர்—அப்பெரியார்
அண்ணா மலைத்தீபம் ஆண்டு தொறும்சென்று
கண்ணாரக் காண்பார் களித்து.

கார்த்திகைத் தீபவிழாக் கண்ட பலனாக
நேர்த்தி பெறப்பிறந்த நேர்மகவாம்—சீர்த்தியால்
இன்னோற்(கு) அருணகிரி யென்ற பெயரிட்டார்
அன்னோர்பின் னே,துறவுற் றார்.

அருணையினிற் றன்னதுயர் ஆகம்விடுத் தார்,அப்
பெருமை உணர்ந்து பெரிதும்—அருமையுற
ஆண்டுதொறும் சென்றுவிழா ஆற்றுகின்றார்
நீண்டு வளர்க நிலத்து. [இன்னவர்தாம்

நெல்லைவரு தண்டபா ணிப்பெருமான் சீர்அருணைக்(கு)
எல்லையிலன் பாற்பாட் டிசைத்திட்டார்-சொல்லவற்றுள்
ஓர்பகுதி அச்சிட் டுதவும் அருணகிரி
சீர்பலரோர்ந் தார்இத் தினம்.

தூத்துக்குடியிற் றுலங்கொருசல் விக்கழகம்
ஏத்து படம்பதிக்கும் இன்கூடம்—சீர்த்த
விருதுநக ரிற்புரியும் மேலோர் இவர்தாம்
கருதுமின்பாய் வாழ்க களித்து.

---

# நூலாசிரியர் வரலாற்றுக் குறிப்பு.

திருநெல்வேலியில் 28—11—1839-ல் சைவ வேளாளர் மரபில் தோன்றியவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். இளமையிலேயே ஆறெழுத்தருமறை உருவேற்றல், வேல் வழிபாடு செய்தல் இவைகளை மேற்கொண்டதன் காரணமாகச் செந்தமிழ்க் கவிகள் பாடுந்திறன் வாய்க்கப்பெற்றார். முருகதாச சுவாமிகள், திருப்புகழ்ச் சுவாமிகள் என்பனபோலும் திருப்பெயர்கள் இவருக்குண்டு.

சருவ சாதாரணி என்ற எழுத்தாணிகொண்டு இலட்சம் பாடல்களை இயற்றியதுடன் அவைகளைத் தாமே பனையோலைச் சுவடியிலும் எழுதலானார். சமய பேதமில்லாமல் அறுசமயக் கடவுளர்மீதும் அளவற்ற பனுவல்கள் இயற்றலானார். பொது நூலாகப் புலவர் புராணம், தமிழலங்காரம், அறுவகை இலக்கணம் போன்றவைகளைத் தந்துள்ளனர். சில நூல்களை இறைவன்மீது கொண்ட ஊடல் காரணமாகவும், வைராக்கியம் காரணமாகவும் அனலில் - புனலிலிட்டுச் சிதைத்தனர். இவைபோகத் தற்போதுள்ள பாடல்கள் ஐம்பதாயிரத்திற்கும் மேற்பட்டவையாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

பல தலங்களை வழிபட்டு ஆங்காங்குள்ள இறைவன்மீது பதிகம் முதலான நூல்கள் இயற்றினர். கடல்கடந்து சென்றும் தெய்வநெறி தழைய-சீவகருணை நெறி வாழ-சமய உணர்வு வளரத் தொண்டு புரிந்தனர். "எக்கடவுட்கு எவர் உரிமை பூண்டுற்றாலும் எனக்கது சம்மதம் முடிவில் ஏகந்தானே" என்ற கொள்கையுடையவர். சீவ கருணை நெறிக் கருத்தைத் தமது நூலில் பலவிடத்தும் எடுத்தியம்பியுள்ளார். வடலூர் இராமலிங்க வள்ளலாருடன் பலமுறை கலந்து பேசி மகிழ்ந்தபண்பினர். "அருணகிரிநாதருடைய அம்சமாகத் தோன்றியுள்ளாய்" எனப் பன்முறை முருகப்பெருமான் அருளக் கேட்டவர். இவருடைய தவத்தையும், புலமையையும் கண்டு போற்றிய பெரியோர்கள் இவரைக் குருவாகக்கொண்டனர். சிலர் ஆசிரியராக ஏற்றுச் சந்தம் முதலிய இலக்கணங்களைப் பாடம் கேட்டவர்கள் பலர். திருவருளின் துணைகொண்டு அருளாடல் பல செய்தனர்.

இறுதியில் நடுநாட்டுச் சிவ தலங்களிற் சிறந்த திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் 10 ஆண்டு காலம் தங்கித் தவமியற்றி அவ்வூர் ஸ்ரீ அபிராமேசுவரப் பெருமான்மீது அளவற்ற நூல்களும், தல புராணமும் அருளி 5—7—1898-ல் ஞானசமாதி கொண்டனர். இவரால் நிறுவப்பெற்ற கௌமார மடாலயம் இவரது ஞானசமாதிக் கோயில், ஏட்டுச் சுவடிகள், நூல்கள் முதலியன இப் பெருமகனார் சந்ததியினரால் பாதுகாக்கப்பெற்று வருகிறது.

இவர்கள் அருளிய நூல்களில் சமயம், சமுதாயம் நன்னிலை பெறத்தக்க கருத்துகள் பலவுள்ளன. அவை ஏட்டுச்சுவடியிலேயேயுள்ளன. அவை புண்ணியப் பெரும்பொருளாளர் ஆதரவில் வெளிவந்து நூற் கருத்துகளும், சுவாமிகள் புகழும் பரவத் திருவருள் துணை புரியுமாக!

உ
கணபதி துணை

# 1. வல்லாளன் கோபுரத்தின் தென்புறமுள்ள

# கணபதி பதிகம்

---

*காப்பு - வெண்பா*

குளிர்சோலைத் தென்னருணைக் கோபுரத்தில் வாழும்
களிறுன னத்தானைக் கண்டு—தெளிவுதர
வேண்டுமெனப் போற்றி விளையாடும் ஆசையினால்
ஈண்டுவரும் பேறுபெற்றே னே.

*நூல்—வெண்டளைக் கலிப்பாக்கள்*

அன்றூர்வத் தோடும் அடியேன் மனத்தில்வந்து
நின்றாடல் செய்ததனை நீமறந்து விட்டாயோ
பொன்றாப் புலவர் புகழும் தமிழ்ப்பெருஞ்சீர்
குன்றாத் திருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே 1

கூடா ஒழுக்கக் கொடியா ருடன்கூடி
வாடாத செல்வம் வருவிக்க வல்லாயோ
நீடாழி சூழ்புவியோர் நித்தம்நித்தம் போற்றும்வண்மை
கோடாத் திருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே. 2

ஈட்டும் பொருட்குவையில் எள்ளளவும் ஈயாதார்
மாட்டும் இரந்து மனமெலிதல் தீராயோ
வேட்டுவனைப் போலுயர்ந்த மெய்யடியார் தம்மோடும்
கூட்டுந் திருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே.

வேட்டுவன்—குளவி, இது கூடுகட்டிப் புழுவை உள்ளே வைத்து மூடிவிடும். குளவியின் நினைவினால் புழு குளவியின் உருவம் கொட்டும் தன்மை பெற்று வெளிவரும். இதுபோல, உண்மையடியவர், சாதாரண மக்களையும் நல்லொழுக்கப்படுத்தி ஆட்கொள்வர் என்பதாம். 3

ஆறு நெறியும் அகற்றா நின் அக்கரத்தைத்
தேறும் அவர்போற் சிறியேனும் உய்வேனோ
கீறும் பவளமுகக் கிள்ளையும்உள் தெள்ளுதமிழ்
கூறும் திருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே 4

எள்ளும் கொடியார்தம் ஈடழித்துன் ஏற்றமெல்லாம்
விள்ளும் படிதமியேன் வேண்டுவதும் பொய்தானோ
கள்ளுண்ட வண்டிசைக்கக் கானமயி லாடுபொழில்
கொள்ளும் திருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே. 5

வேயிசைந்த தோளார் விழியால் வெருளுமென்னைச்
சேயிற் றழுவித் திருவருட்சீர் ஈந்தருள்வாய்
தாயிற் சிறந்தொளிரும் தண்கருணைச் சங்கரனார்
கோயிற் றிருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே. 6

நாத்தழைக்கப் பாடிமகிழ் நாவலவர் பற்பலரும்
மூத்தவனென் றுன்னை முதலோதற் கண்டடைந்தேன்
தீத்தகுவன் றன்னையுண்டாய், சேயிழையோ டாடும்அருட்
கூத்தன் திருவருணைக் கோபுரத்தில் வாழ்களிறே. 7

பொன்னிலங்கு காவிரியைப் பொற்பார் பொருநையுடன்
முன்னிலத்தோர்க் கீந்ததனை மூவுலகுங் கூறுதோ
மின்னிலங்கு செஞ்சடையாய் வெற்றிமிகும் அங்குசத்தாய்
கொன்னிலங்கு தென்னருணைக் கோபுரத்தில் வாழ்களிறே 8

வாளிணையும் மைக்கண் மறமடைந்தைக் காசைகொண்டு
வேளிரங்கக் கண்டு விரைந்துதவி செய்திலையோ
தாளிறைஞ்சு வார்கனவிற் சந்ததமும் போய்வருவாய்
கோளிலா மூதருணைக் கோபுரத்தில் வாழ்களிறே. 9

ஆண்டுபனைத் துண்(டு)ஒன் றரியகனி மூன்றுதவ
வேண்டும்வண்ணம் பெற்றுள்போல் மேதினியில் வாழ்வேனோ
நீண்டு சுருள்பனைக்கை நின்மலனே நீறணிவார்
கூண்டு புகழருணைக் கோபுரத்தில் வாழ்களிறே. 10

கோல மலியருணைக் கோபுரத்தில் வாழ்களிற்றை
"வேல னருள்புதல்வன்" வேண்டுதமிழ்ப் பாடல்பத்தும்
சால மதுரம் தழைத்ததெனச் சந்ததமும்
சீலமொடு சொல்லித் தெளிவார் சிறந்தோரே. 11

தண்டபாணி சுவாமிகள் தன்னைக் கூறும் இறுதிப் பாட்டில், வேலன் அருள் புதல்வன், என்று கூறும் உரிமையைக் கண்டு மகிழ்தல் நலம்.

உ
முருகக் கடவுள் துணை

# 2. திருவருணை - கோபுரத் திளையனர் திருப்புகழ்

## கணபதி காப்பு - வெண்பா

அந்தத் திருப்புகழை ஆழாழி யீவதெண்ணி
இந்தத் திருப்புகழை யான்பாடச் – செந்தமிழைத்
தந்தகும்ப மாமுனிக்குத் தண்பொருளை யாறுதவ
வந்ததந்தி மாமுகன்கா வல்.

## கலைமகள் - கட்டளைக் கலித்துறை

தென்னரு ணைத்திருக் கோபுரத் தோங்கும் சிவகுருமேல்
இன்னமு தன்ன திருப்புகழ்ப் பாடல் இயம்புதற்கு
முன்னம் அவனெனத் தன்கிளி யென்ன மொழியச்செய்த
அன்ன மனைய கலைவாணி தாள்கள் அரணங்களே.

## நூல் - குழிப்பு

நான தத்ததன தனதன தனதன - தனதான

ஆனை பெற்றமகள் இளமுலை வருடிய
வாழ்வு டைக்குமர குருபரன், மறமகள்
ஆசை யுற்றுவன மதிலொரு முனிவடி-வொடுபோனேன்
ஆர ணத்தின்முதல் மொழியினில் உளபொருள்
கூறெ னக்கறுவி மலரவன் அழவிடும்
ஆண்மை யுற்றகுகன் அடியவர் பிழைகளை – நினையாதான்
மேனை முத்தமிட வருகுயி லனையவள்
பால்கு டித்(து)அறுவர் தருமுலை அமுதமும்
வேண மட்டும்நுகர் குமுதமென் மலர்பொரு-கனிவாயான்
வேல ணைத்தபுய வரிசையில் ஒருகிளி
தான தத்ததன தனதன என,மயில்
மீது நித்தம்வரும் இளையவன் எனுமவர் – அடிதாராய்
கூனை ஒத்தமுலை அலகையை நினைதொறும்
ஆவி தட்டழிய மறுகிய கவியொடு
கூட வுற்றமுனி வரும்உய அருளிய – முருகோனே
கோப முற்றிஅலை கடலொடு வருணனும்
வாய்வி டப்பொருது சனகன்முன் உதவிய
கோதை யைக்கொணரும் நெடியவன் மனமகிழ் -
மருகோனே

மானை வெற்றிமிகு மழுவுடன் அணிபவர்
காளி வெட்கமுற நடமிடும் இறையவர்
மாத வப்பயன தெனவரும் அழகிய — புதல்வோனே
மாச றுத்தருளும் அருணையில் ஒருமுது
கோபு ரத்தின்அடி நிலையினில் உளபெரு
வாயி லுக்கருகில் வடபுற மருவிய — பெருமாளே.

ஆனைபெற்ற மகள் – தேவருலகத்துள்ள ஐராவத யானையால் எடுத்து வளர்க்கப் பெற்ற தெய்வயானையம்மை, மேனை—மலையரசன் மனைவி, இவரது வளர்ப்பு மகளாக வந்த பார்வதியம்மை, அறுவர்—கார்த்திகை மாதர்கள், கூனை—பெரியமிடா, அலகை—நற்கீரரைச் சிறையிட்ட பேய், கவி—கீரன், கோதை—சீதை, ராமன் கடலில் அணைகட்டிய சமயம், கடலில் அலை மோதித் தடை செய்தனன் வருணன்—அம்பெடுத்து எய்ய நினைத்த அப்போது வருணன் தஞ்சமானான். பின் அலை தடை செய்யவில்லை, அணை கட்டப் பெற்றது. மாசு—பிறவிக்குரிய வினைத்தடை. 1

தனனத் தானனத் தனதன—தனதானா

பொருளுக்(கு) ஆசைவைத் துலகினர்
மனையிற் போய்அவர்க் கினியவை
புகலப் போவெனத் தமியனை —இகழாதே
புனிதப் பூசையிற் பழகிய
பெருமைக் காரரைக் கொலையொடு
புலையுற் றோரெதிர்த் திகழ்வது —மலியாதே
இருளைப் போலுமைக் குழலியர்
சரசத் தோதகத் தொழில்வலி
இருமைக் கானமெய்த் தவசினை —அழியாதே
எழில்முற்(று) ஓர்மயிற் பரியதன்
முதுகிற் றோணும்இத் திருவுரு
வினில்உற் றுடிடச் சிறிதுளம் —இசையாயோ
உருள்கட் பேய்மிகக் குதிகொள
அசுரச் சேனைபட் டொழிய,விண்
உறைபுத் தேளிர்நற் சுகமுற —விடும்வேலா
உமை,எட் டாயுதத் தொருகொடி,
மதுரக் கோமளத் தமிழ்நயம்
உணர்வுற் றோர்களைப் பிரிவரும் —அவள்பாலா
அருள்பெற் றுணவத் தலைமுறி
படநிர்த் தூளியிட்(டு) உயர்பவர்
அருகிற் போய்உவப் பொடுபணி —புரிவோனே
அகிலத் தோர்களுக் களவறு
சுகம்எப் போதும்மிக் குதவிடும்
அருணைக் கோபுரத்(து) அடியவர் —பெருமானே

இனியவை புகல – இனிமையான மொழி கூற, – போஎன வெளியேபோ என்னுமல், புனிதப்பூசை-கொலைபுலால்ஆதிய தீமையற்ற சுத்த வழிபாடு இருமை – இம்மை-மறுமை, எட்டு ஆயுதத்து ஒரு கொடி – எட்டுப் புயங்களில்கலைகளையுடைய துர்க்கை, — ஆணவத்தளை — அகந்தையான விலங்கு. 2

*தனதன தனதன தனனத் தனனந் - தனதான*

கருவிழி மருளவெண் நகைசற் றுளிரப்,
பெருமலை நிகர்துணை முலையைப் பொதிபொற்
கலைநெகிழ் வுற,அன நடைகற் பவரிற் – குயில்போலே
கழறிய மொழியொடு தெருவிற் றினம்உற்(று)
இளையவர் மனதொடு பொருளைக் கவர்துற்
கணிகையர் வளவினில் அலைவுற் றருளைப் -பழியாதே
பொருவரு தவநெறி யதனிற் றுணிவுற்(று)
இமையவர் உலகினும் மயலற் றருமைப்
பொதுநிலை யதனிடை அமருற் றுருமுத் -தமிழாலே
புனிதமும் மதுரமும் நிறம்ஒப் பெனமற்(று)
உளநல முழுமையும் அமைவுற் றதிருப்
புகழ்பல சொலியுன தடியிற் புனையப் -பெறுவேனோ
திருமக ளொடுமலை மகள்ஒத் தவிர்பொற்(பு)
இலகிய வனிதையர் இருவர்க் கிடையிற்
சிகிமுது கினில்ஒரு பவளக் கிரியிற் -றிகழ்வோனே
சிவகுரு பர,சர வண,நித் திய,தற்
பதசுக, மவுனசண் முகனைக் கருதித்
திரிவது நலமெனும் அவரைக் கணம்விட் —டகலானே
அருமறை முடிவினில் நடமிட் டபதத்
துணையினை வளமலி பொதியைக் குவடுற்
றவன்முடி புனையமுன் அருள்மெய்க் கருணைக்-குகவேளே
அணிபொடி ஒளிமுழு மதியொத் தவிரப்
புனைகலை இரவியல் மிளிரத் துதிசெப்(பு)
அடியவர் புகழ்மலி அருணைச் சிகரிப் -பெருமாளே.

பொதுநிலை-சமய பேதமற்ற சமரச நிலை- திருமகளைப் போன்ற பொன் நிறம் தெய்வயானையும், மலைமகளான உமையைப் போன்ற பசுமைநிறம் வள்ளி நாயகியும், ஆம். முருகன் நிறம் பவளம் போன்ற செந்நிறம். அடியவர் பூசிய திருநீறு – முழு மதி போல வெண்மையும், அவர் அணிந்துள்ள கல்லாடை சூரியனைப் போன்ற சிவப்பும் உடையன என்பதாம். கோபுரத்திளையனார் சந்நிதியில் அடியவர் குழாம் என்றும் மலிந்திருப்பது சிறப்பாகும். 3

தனைதனந் தான தத்தத் - தனதான

களபமணிந்(து) ஆட கச்செப்-பனையஅலங் கார முற்றுக்
களிறுவெருண் டோடி முட்டிக் - கிரிமேலே
கருமுகில்வந் தாலெ னச்செப் - பிடமுதிருஞ் சூசு கத்திற்
கமலமெனு ம் பாண மெத்தப் — படலாலே
இளமதனன் போல்வ னப்புப் - பெறுமவர்தின் டாடி டச்செற்'று)
எழுமுலைகொண் டோரை மெச்சித் - திரியாதே
இலகுபசுந் தோகை யிற்சுப்-பிரமணியன் தேவர் வெற்றிக்(கு)
இனியவனென் பார்ப தத்தைப் - பணிவேனே
தளர்நடையும் கோலும் வைத்துக்-கிழமுனிவன் போல்வ னத்திற்
றனிமறமின் பால்இ ரத்தற்(கு) - உரியோனே
தனனதனந் தான தத்தத் - திரிகிடதிந் தோமெ னச்சிற்
சபையிடைநின் ருர்தொ ழச்சற் - குருவானாய்
அளகையினன் ருனெ னப்பொற்-பணமிகவுந் தேடி வைத்திட்(டு)
அழிபவர்பின் போவ(து) அற்கப் - புரிவோனே
அரிஅயன்முன் தேடும் வெற்புற்(று)இணையில்பெருஞ்
சீர்கொள் கொற்றத்'து)
அருணைநெடுங் கோபு ரத்துப் - பெருமாளே

ஆடகச் செப்பு - பொற்செப்பு. சூசுகம் — முலைக்கண், மறமின் — வள்ளி. அளகையினன் — குபேரன். அற்க - அற்றுப்போக. கொற்றம் — வெற்றி. 4

தனனதனந் தானன தானன - தனதான

சினைமேகம்ஒப் பாகிய கார்குழல் - மகமேருஒப் பாகிய பூண்முலை
செழுமாமதிக் கூறெனும் வாணுதல் — மடமானர்
செயுமாயையிற் பேய்கொளும் நாயென-அலைவார தமைப் பாடியபாவலர்
சிரியாதருட் சீர்பெற வேபுரி — தவசாலே
உனை நாடகத் தோகையின் மீதிரு-மடவார்களுக் கூடயில்வேலுடன்
ஒருநாள்வரக் காணினும் நானில — மிசைவாழ்வார்
உருவேறெடுத் தான்நெடு மாலிவன்-எனும்வாழ்வுபெற் றீசரனுமென
உயர்வானகத் தேமகிழ் வேனெனல் —அறியாயோ
பனைநேர்கரத் தானைமு காசுரன்-இருகூறுபட்(டு) ஓர்வரைபோலுறு
பழிகாரன் நிர்த் தூளிய தாகிட —விடும்வேலா
பனிவேய்வனத் தூடொரு நாளெனை-அடியார்களுட் சேர்புகழ் தோய்தரு
பழையோன்எனக் கூறிய பேரருள் —உடையோனே
அனையா மொழிற் பார்வதியாளுடன்-உடுமாதர்கைக் கேறிய வேளையில்
அழுதாயெனப் பாடிடு வோரையும் — முனியானே
அமராவதித் தேவர்க ளாதியர்-மறவாமலெப் போதினும் நாடிய
அருணாசலக் கோபுர மேவிய — பெருமாளே

மதிக்கூறு—சந்திரப்பிளவு (அரைச்சந்திரன்), வாள் நுதல்—விளக்கமான நெற்றி, ஆனைமுகாசுரன்—தாருகன், பழையோன்—அருணகிரிநாதர், உடுமாதர்—கார்த்திகை மாதர்கள், அமராவதி—தேவருலகம்.

தனனந் தனதன தனதன—தனதான

கருணைக் கடல்நிகர் முனிவரர். பனுவற் றெருகுதியில் நடுவுள
கவியைப் பழுதெனும் அவரொடு—பழகாதே
கலகத் துணைவிழி மகளிரொ(டு)—இரவிற் பொரவரு மதனது
கலையைப் புகழ்பவர் முகமதில்—விழியாதே
பொருளுக் கதிமயல் கொடுபல—நகரத் துளசிலர் மனையிடை
புகுதுர்க் குணமதை நலமென—மதியாதே
புனிதத் தமிழ்கொடுன் அடியவர் — மகிழத் துதிசெய்துன் அருள்வலி
புனையத் தகுமொரு தினமினி—உதியாதோ
அருமைப் புனல்வளம் நிலவிய-பொருநைக் கிடைவளர் உருமலை
அதிலுற் றெருமொழி உதவிய—கனிவாயா
அதிவிற் பனர்புகழ் திருமலை-யதிலுற் றுருளுமென் அணியுடல்
அழிவற் றுலகினில் உலவிட—அருள்வோனே
இருள்முற் படநிகழ் மலமுழு(து)-ஒழியப் பரகதி விழைபவர்
இதயத் தநுதினம் நடமிடு—முருகோனே
இதழிச் சடைமுடி யிறையவர்—அருணைச் சிகரியின் வடவரு
கினில்உற் றிமையவர் பரவிய—பெருமாளே.

பொருநை — தாமிரபரணியாறு, ஒருமொழி — முற்பிறவியில் அருணகிரிநாதரென்ற பொன்மொழி, மலம்—ஆணவம், இதழி—கொன்றை.

6

தனன தானனந் தனதன தனதன—தனதான

புலைவி டாநெறிக் கயவர்கள் புயவலி
அழிய வாளெடுத் தமர்புரி வயவர்கள்
புகழ்கு லாவிடக் கருதிடு மவர்மனம் — மெலியாதே
புனித மீனும்முத் தமிழ்நயம் உணர்பவர்
மிடியி னுல்இளைத் திதமொடு நயமொழி
புகல்கி லார்தலைக் கடைகளில் அநுதினம்— நுழையாதே
கலைக ளேபடித்(து) உனதருள் வலிமிக
உதவும் ஆறெழுத்தி தினையிகழ் கொடியவர்
கமல நான்முகத் தயனென உலகினில் — மிளிராதே
கலப மாமயிற் பரியதன் முதுகினில்
இருமி னுர்அடுத் துறஅயி லுடன்ஒரு
கனவி லேனும் எத் திளம்வா நினைவைசொல் — அறியேனோ

தலைவ னும்முரட் டவுணன்முன் உததியின்
நடுவில் மாமரத் துருவுடன் அசைதரு
ததியில் வேர்முதற் றறிபட அடுதிறல் — முருகோனே
சரண வாரிசத் துணைகளை நினைபவர்
பிறகு போய்அவர்க் கினியவை புரிவது
சகச மாமெனக் கெனமுது மறைபல — பகர்வோனே
அலைம கோததிப் புனல்சுவ றிடவிடு
பகழி கோடிவைத் துளநெடி யவன்,முனம்
அமரர் பால்உரைத் தருளிய புகழ்வளம்—உடையோனே
அகில கோடிமுற் றிலுமுள பெரியவர்
பரவு சீர்பொறுத் துயர்தழல் வரைதிகழ்
அருணை மாநகர்ச் சிகரியில் இனிதுறை — பெருமாளே.

தலைக்கடை—தலைவாசல், அவுணன்—சூரன், சரணவாரிசம்—திருவடித்தாமரை, மகோததி—கடல், பகழி — அம்பு, தழல் வரை—நெருப்புமலை. 7

*தனனதன தனனதன—தனதான*

பழிபுரியும் மடமகளிர்-கலவிநல மெனஅவர்சொல்
பணிவிடையில் அநுதினமும் — முயலாதே
பறிதலைகொள் அமணரினும் - இழிவுபெறு புலையர்நெறி
படர்வதற முனியும்நிலை — தவறாதே
பொழிதமிழின் நயமுணரும் - அறிஞரொடு பழகியிரு
பொழுதுமுனை வழிபடுமெய் — உணர்வாலே
புனிதசர வணகுமர குருபரசண் முகமுருக
புனவனிதை கணவனென —மொழியேனோ
விழிநிரையில் ஒழுகுதிரு - வருள்கருதி உருகுமவர்
விதியழிய நடனமிடும் — இருதாளா
விரைமருவு புனலியொடு - குரவமணி புயவரிசை
மிசையுலவு கிளியுடைய — குருநாதா
செழியர்குல மணியெனவும் - வடிவுகொடு கனகவரை
சிதறஒரு தினமுனியும் — விறலோனே
திகழும்அனல் வரைகுலவும் - அருணைநக ரதனிலொரு
சிகரிவட வருகில்உறை — பெருமாளே.

இழிவுபெறுபுலையர்-சமணர், சைவசமய நிந்தையொன்றே புரிபவர், சீவகருணையிற் சிறந்தவர், புலைநெறியோர் — புலால் உணவு, கொலை, ஆதிய புரிபவர். எனவே அமணரினும் புலைநெறியோர் தாழ்வென்பதாம், விழிநிரை—கண்களின் கூட்டம், முருகனுக்கு ஆறு திருமுகங்களிலும், முகமொன்றுக்கு மூன்று கண் வீதம் பதினெட்டுக் கண்கள் உண்டு. வடமொழிக் காந்தத்திற் கூறப்பட்டிருக்கிற உண்மை. செழியர்குலமணி — உக்கிர குமார

பாண்டியனாக வந்த முருகன் அவதாரம். கனகவரை—மேருமலை. முனிதல்—செண்டாலடித்துப் பொருள் கொணர்ந்தது. திருவிளையாடற் புராணத்தில் விவரம் காண்க. 8

*தய்யானந் தான தத்தத்—தன தானா*

பொல்லார்தம் பால்இ ரக்கத் - துணியாதே
பொய்யோதும் பாழ்ம தத்தைப் - புகழாதே
எல்லாரும் பேணும் வெற்றிச் - சிகிமீதே
எல்லூடுன் சேவை யைப்பெற் - றவர்ஆரோ
கல்லாலின் கீழ்வி ருத்தற் - குரியோனே
கைவேல்கொண்(டு) ஆனை யைக்குத் - தியவீரா
மல்லாருஞ் சோண வெற்பிற்(கு) - அருகாம்ஓர்
வல்லாளன் கோபு ரத்துப் - பெருமாளே.

எல்லூடு — சூரியவட்டத்துள்ளாக, விருத்தர் — சிவபிரான், ஆனை—தாருகாசுரன், சோணவெற்பு—திருவருணை, சோணம்—நெருப்பு. 9

*தனனதான தனனதான—தனதானா*

கருணைமேரு எனமுனாள்உன்-இயல்பைஓதும் முனிவன்வாய்சொல்
கவியில்ஆசை பெருகுவார்தம் - உறவாலே
களபவாச முலைமினார்கள் - மனைகள்தோறும் அலைவதான
கருமநோயை முனியுமேன்மை - பெறுசீரார்
பொருளைநாடி மெலிவரோ?என்-விதியையாவரொடுசெல்வேன்.ஓர்
பொழுதுமேனி யுடனொநாது - கனவூடே
பொருளையாறும் அறியஓதும்-மொழியைவீணர் வினவும்வேளை
புகல்குரூரம் அவசம்ஈவ - தறியாயோ
தருமன்வீமன் விசையன்வீர - நகுலன்,யாவும் உணரும்ஞானி
தமதுள்ஆவி யனையமாயன் - மருகோனே
சகலர்காண அரியகோல - வடிவைநீல மயிலின்மீது
சரதமாக நினையும்ஆண்மை - அருள்வோனே
அருகன்ஆதி யவரை,ஆதி - பகவனாக நவிலுமூடர்
அறியொணாத மகிமைகோடி - உடையோனே
அணிகொள்மேனி முழுதும்நீறு - புனையுமோன முனிவர்கூடும்
அருணைநீடு சிகரிமேவு - பெருமாளே

"கருணைமேருவே தேவர் - பெருமாளே" என்று திருப்புகழிற் பாடியவர் அருணகிரியார். மெலிவரோ - பெண்ணாசையை விட்ட பின்னும், பொருளாசை பற்றியது ஏன்?என்று தன் அநுபவத்தைக் கூறியதாம். ஞானி - சகாதேவன். சகலர் - சகலான்மாக்கள். அருகன் - சமண சமயக்கடவுள். அதனை எல்லாம் வல்ல பரமனோடு ஒப்பக்கூறுதல் கூடாதென்பதாம். "பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனேபுத்தன்" என்பது நிகண்டு. 10

தனனதான தத்தத்த தான - தனதான

கனகமேரு விற்கொத்து நீடும் - முலைமினார்ந கைத்துற்ற போது
கரியமாரன் விற்றெட்ட பூவின் - மயலாலே
கழலில்விழும் அற்பர்க்கு நாணி – மனைகள்தோறும் உற்றுப்பல் வாறு
கழறுவேனை இச்சித்து நீல – மயில்மீதே
பனகபூட ணத்(து)அத்த ஞரும் மலயமால்வ ரைக்கத்த னை
பழுதிலானும் முற்பெற்ற சேவை – தருவாயோ
படிறுகூறி டத்தக்க மூடர். சமயமேலி டப்,பத்தர் ஆவி
பதறுமா(று)இ றக்கச்செய் வாய்கொல். அறியேனே
சனகராசன் வைத்திட்ட சாபம். முறியவேல்வ ளைத்துப்பொ னை
சனகியார்ள டுத்திட்ட மாலை - புனைதோள்மால்
சபலமாந டுக்குற்ற தேவர் – மகிழுமாறு(உ) றுத்திச்சொல் வீறு
தழையுமேன்மை முற்றிக்கு லாவு – முருகோனே
அனகவேத விற்பத்தி யாளர் – தவமெலாம்உ ருப்பெற்ற தாகி
அவிருமாக ரச்சத்தி வேலை – அணிவேளே
அருணமால்வ ரைக்கொப்ப தான – நெடியகோபு ரத்துற்றென் ஆவல்
அருளுமோக னச்சித்த னை - பெருமாளே

பனகபூடணத்து அத்தன் – பாம்பை ஆபரணமாயணிந்த சிவன். மலய மாமலைக்கத்தன் - பொதியமலைத் தலைவரான அகத்தியர். சனகி-சீதை, அனகவேதம்-மேன்மையான மறை. அருணமால் வரை-திருவண்ணமலை.

11

தனைதனத் தனைதன - தனதான

கரியகுழற் சரியமுலை – அணிகலைசற் றுலையநகை
கவினஅனப் பெடையதென வருமானார்
கபடமிகச் செயமறுகி-அவர்அடியைத் தொழுதுபெறு
கலவியினைச் சுகமதென நினையாதே
பெரியவர்சொற் படியரிய - தவசுமுடித் தினியதமிழ்
பெருகஇயற் றியமுனிவன் அருளாலே
பிறையணிதற் பரன்அருளும் - உனையிருபொற் கொடிகளொடு
பிணிமுக(ம்)மைப் பரிமுதுகில் அறிவேனோ
சரியணிகைக் குமரிஅபி–நயவிநயக் கவுரிதரு
தனயனெனப் புகலினும்உள் மகிழ்வோனே
சரவணசற் குருபரமெய் - அடியவருக் கெளியகுக'
சகுணபரப் பிரமமென வளர்வேலா
தெரியலெனக் குவளையொடு - குரவணிமற் புயமிசைஒர்
சிறியவுடற் கிளியுலவும் இளையோனே
திகிரியுடைப் பகவன்அயன்-விழையும்அழற் கிரிமருவு
திருவருணைச் சிகரியுறை பெருமாளே

முனிவன் - அகத்தியர். பிணிமுகம் - முருகன் யானைப்பெயர். மயிலென்பதும் உண்டு. "ஓடாப்பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" என்பது திருமுருகாற்றுப்படை. மைப்பரி - ஆட்டுவாகனம். சரி அணி - வளையலணிந்த. சகுணபரப்பிரமம் - உருவத்தைக் கொண்டுள்ள பரமன். தெரியல் - மாலை. திகிரி – சக்கரம். அழற் 12
கிரி - நெருப்பு மலையான திருவருணை.

*தனன நன தானனத் தனந்த – தனதான*

முகிலனைய வார்குழற் சரிந்து – விழஅதனின் வேர்வைசற் றரும்ப
முலையிலணி சேலைசற் றெருதுங்க மயலாலே
மொழிகுழறு வாரெனச் சிணுங்கி-அணுகும்விலை மாதருக் கிரங்கி
முகுளமலர் வாளிதைக் கநொந்து மிடியாலே
திகிலடையு மூடரைத் தொடர்ந்து – சிலகவிதை கூறிமிக் கிரந்து
திரியுமெனை ஆளுமிச் சைகொண்டு மயில்மீதே
திகழும்அயில் வேல்பிடித் திருந்து – வரும்நினைவி லாவிடிற் றுணிந்து
தெரிசனையில் என்அதைப் பகர்ந்த தறியேனே
மகிழமலர் மாலையைப் புனைந்து – புளியமர நீழலுற் றநண்பன்
மனமலரில் ஆடும்அச் சுதன்றன் மருகோனே
வலிமைமிகு தானவக் கணங்கள்-பரவும்அடல் மாவினைப்பிளந்து
மலைவுறும்வி ணுடரைப் புரந்த முருகோனே
அகிலமதி லேமுளைத் தெழுந்த – மலைகளிலெ லாம்நடித் துவஞ்சர்
அறிவரிய சீர்பொறுத் துயர்ந்த கழலோனே
அருமறையொ டாகமத் துமன்பு செயுமவர்கு மாமிகப் புகழ்ந்த
அருணைமுது கோபுரத் தமர்ந்த - பெருமாளே

நண்பன் – சடகோபாழ்வார். திருக்குரு கூரிற்புளிமரப் பொந்தில் யோகமியற்றியவர். அவரணிந்தது மகிழ மலர்மாலை. மா-மாமர 13
மானசூரன்.

*தனைதான தத்த தனதன தனதன - தனதான*

கவலையால்இ ளைக்கும் எனதுள மகிழவும்
உடையும்ஓ டெடுத்து மனைதொறும் நுழைபவர்
கழல்கள்பேணி மிக்க பணிபல புரியுமெய் உணர்வாலே
கலியைவேர றுக்கும் நலமுறு புரவலன்
வரவும்,மா நிலத்தில் அனைவரும் விதிமுறை
கருதியேந டக்கும் அதிசய மலியவும் இருளாலே
அவமெலாம்இ யற்றும் அவர்குலம் நசியவும்
உயிர்கொலாது சுத்தம் உறுமுண வயில்பவர்
அறிவினாடி ருக்கும் நெறிமுழு துயரவும் வெருளாதே
அளவில்வேண மட்டும் மழைபொழி யவும்,மயில்
முதுகிலேறி வெற்றி அயில்கொடு மனைவியர்
அருகில்மேவி டக்கண் எதிர்வரும் ஒருதினம் —நிகழாதோ

பவளமேரு ஒத்து நிலவிய திருவுரு
அதனையேநி னைத்து வழிபடும் அடியவர்
பலர்முனுள்உ ரைத்த படிநட வியபுகழ் உடையானே
பயறுதோசை அப்பம் அவல்பொரி கடலைகள்
விடலைமோத கத்தொ டனையவை தருமவர்
பயமெலாம்ஒ ழிக்கும் அழகிய களிறுடன் வருவோனே
சிவபிரான்ம கிழ்ச்சி யுறவொரு பிரணவ
நிலையம்ஓதி வைத்த குருபரன் எனுமவர்
சிரசில்வேதன் இட்ட பொறிஅழி வுறஅணி கழலோனே
திருவணும லைக்கொர் அணியென வளர்புகழ்
பெறுவலாளன் முற்செய் தவமென உயர்வுறு
சிகரிவாயி லுக்கு வடவரு கிலகிய பெருமாளே

உடையும் ஓடு - பிச்சையெடுப்பதற்காக. உடைந்தஓடு கொள்பவர் முற்றத் துறந்த முனிவர். 'சிதவல் ஓடு' என்பர் குமரகுருபரர் அழகுக்காக அல்ல, கலியைவேரறுத்தல் - தன்னை அடுத்தவர் வறுமையை மாற்றல் அரசரியல்பு, மிகாதும் குறையாதும் மழை பொழிதல் நாட்டு நலனுக்குரிய தென்பதை 'அளவில்' என்றார் ஆசிரியர். விடலை - சிதறும் தேங்காய். திருவண்ணமலையில் முதலிலிருப்பது பிரபுடன் கோபுரம், அடுத்தது வல்லாளன் கோபுரம் இங்குதான் முருகன் சந்நிதி சிறப்பு, அடுத்தது கிளிக் கோபுரமாம் 14

*தானதன தத்த—தனதான*

காரவுணர் ஒத்த - தீயவர்அ டித்த
காசில்மய லுற்று மெலியாதே
காதளவும் வெற்றி - வாள்விழிப டைத்த
காரிகையர் பொய்ச்சொல் வினவாதே
பாரவர்கள் மெச்ச - வாழ்வதுகு றித்த
பாவமிக முற்றி அலையாதே
பாடியுனை நித்தம் - நாடியருள் பெற்ற
பான்மையர்கள் பக்கல் அடைவேனோ
சூரனைவ தைத்து - வாரணம்வ ளர்த்த
தோகையைம ணத்த மணவாளா
சூழ்கடல்கு டித்த - மாமுனி விதித்த
தோமறுத மிழ்ச்சொல் அணிவோனே
மாரன்விடு புட்ப - பாணமிக வெட்கும்
மாதவமு டிப்பை அறிமேலோர்
வாழருணை யுற்ற - கோபுரமு கப்பில்
வானவர்து தித்த பெருமாளே

வாரணம் வளர்த்த தோகை—ஐராவத யானை வளர்த்த தெய்வ யானையாம். 15

*தனைந் தானை தனத்த தானன — தன தான*

மதனப் பாதகன் எடுத்த தாமரை
நழுவிக் கீழ்விழ உறுக்கு மாதவர்
மகிழப் பாடிய தமிழ்ச்சொல் வீணென இகழாதே
மயிலிற் றேகையின் நிழற்குள் வேல்கொடு
ககனத்(து) ஆனைமுன் வளர்த்த பேதையும்
வரிவிற் கானவர் வளர்த்த பாவையும் மகிழ்வாலே
அதரப் பூவிதழ் மலர்ச்சி யாய்அரு(கு)
உறையத் தேவர்கள் முதற்சொல் மேலவர்
அணுகக் கூவிய ததிக்கெ லாம்எதிர் வருவாயேல்
அகிலத்(து) ஈனரை வெறுத்து நான்மறை
முதலிற் கூறிய தனைக்கொள் வார்நெறி
அவிர்தற் காகிய முயற்சி யேமிக விழையேனே
கதமுற் றாழ்கடல் அதற்குள் மாமரம்
எனமுற் றேணிய ஒருத்தன் நீளுடல்
கபடத் தோடற நொடிக்குள் மோதிய விறலோனே
கலகச் சாரணர் குலத்தை வேரொடு
வழுதிக் காமுனம் ஒழிக்கு மாறொரு
கருணைப் பாலகன் எனக்கு லாவிய புலவோனே
புதனிற் சீரிய சமர்த்த னாமென
வரும்நற் கீரனை நினைத்(து)அ னேன்மொழி
புனிதப் பாடலை உரைத்து ளாரொடு திரிவோனே
புலையற் றார்பலர் துதிக்கும் வீறுறும்
அருணைக் கோபுர முகப்பி லேவட
புரமுற் றாயிரம் விதத்தில் ஆடல்செய் பெருமாளே

அதரப்பூ - இதழாகிய மலர் (உதடு), கதம்-கோபம், பாலகன்-ஞானசம்பந்தர், புதன் - கல்விக்குரிய கோள் ஆகும், பாடல் – திருமுருகாற்றுப்படை.

16

*தனன தானனத் தானன தனதன - தன தான*

சகல யோகநட் போதினும் அறிகிலர்
அருவ மேயெனப் பேசிடும் மொழிகொடு
தவமெ லாம்இழப் பார்களை உறவென மதியாதே
தமிழி னால்மிகப் பாடிய புலவரை
மசக மாநிணைப் பார்குடி கெடுவது
தரும மேயெனத் தேறிய மனிதனை இகழாதே
புகலி யூரனைப் போல்ஒரு முனிவரன்
வருவ தால்மலர்ப் போதன்முன் உதவிய
புனிதர் நான்மறைச் சீர்மலி வடைவதை மறவாதே

பொருவி லாதசித் தாடிநின் இருபத
நிழலில் வாழ்வதற்(கு) ஆசைகொள் அடிமைஒர்
பொழுது நீஅயிற் றேஞடன் வரில்மகிழ்வு அடைவேனே
மகளிர் சேனையிற் கூடொரு கிளிமிசை
இரதி யோடுமுற் றேமலர் கொடுவரும்
வகுள மாரன்உட் கூசிட முதிரெழில் உடையோனே
வனச மாமலர்ப் பீடம தனில்ஒரு
குழவி யாய்விணிற் றேவர்க ளருமையில்
வளரு வாள்முலைச் சோடுறும் அழகிய மணிமார்பா
அகல வார்கடற் சூரன துடல்இரு
பிளவ தாகிடச் சாடிய குருபரன்
அடிமை நாமெனக் கூறிடும் அவர்பகை களைவோனே
அகழி சூழ்திருக் கோயிலின் நடுவுள
சிகர கோபுரத் தேவட வருகினில்
அருணை மாநகர்க் காதர மெனவளர் பெருமானே

சசளயோக நட்பு - உருவபாவனையின் சிறப்பு. இதை நட்பு என்றும், அருவ மென்பது பேச்சு - எனவும் கூறியதால், தியானத்துக்கு உருவம் நலமென்பதாம். மசகம் - சிறுகொசு. புகலியூரன் - ஞானசம்பந்தர். வகுளமாரன் - மகிழம்பூ மாலை சூடிய மன்மதன். இரதி. அவன் மனைவி. வனசமாமலர் - தாமரைப்பூ. 17

*தனனத் தானன தானன தனதன - தனதான*

இலவிற் கேயிணை யாகிய கயவர்கள்
வளவிற் போய்அவர் வாய்மொழி நிசமென
இதமெப் போதினும் ஓதிய கவிஞரை மதியாதே
இருளைப் போல்வரு காலனும், மலர்தொடு
மதனப் பாவியும். வானவர் தலையினும்
எழுதிப் பூமியி லேவிடு பிரமனும் வெருளாதே
கலபக் கார்மயில் மீதிரு மனைவியர்
அருகிற் றேய்தர வேலணி புயமொடு
கவினுற்(று) ஓர்மொழி கூறிடு தினம்வரில் உலகூடே
கலகப் பாழ்மதம் யாவையும் அடியொடு
நசியச் சாடிநின் ஆனனம் எனநிகழ்
கணிதத் தூநெறி மேவிடும் நலம்ஒரு பெரிதாமோ
சலசப் பூமிசை வாழ்இரு மகளிரும்
மருவற் காகிய தோளொடு வருமவர்
சரதத் தால்வழி பாடுகள் செயும்எழில் முருகோனே
சகுணத் தேவர்கள் சேனையின் அதிபதி
எனுமெய்ப் பேருட னேமலை தொறும்இரு
சரணத் தால்நட மாடிய புகழ்வனம் உடையோனே

அலகைக்(கு) ஆர்வம தாகிட நிணமலி
களவித் தாரமெ லாம்நுவல் கிளியுடன்
அவிர்பொற் பார்புய மீதென துரையையும்-அணிவோனே
அருணைக் கோபுர வாயிலின் வடஅரு(கு)
உறுபொற் கோயிலி னூடுள மகிழ்வுடன்
அடியர்க் காதர மாமென நிலவிய பெருமானே

இலவமரம் முள்ளுடையது. கனியுமென்று கிளி காத்திருக்கும் - ஆனுல் பஞ்சாய் ஒழியும். அதுபோல் உலோபியர் பொருள் பெற முடியாமல் ஏமாறநேரும் என்பதாம். சலசப்பூ - தாமரை மலர், இரு மகளிர்-கலைமகள் திருமகள். வருமவர். பிரமன். திருமால் என்பவர். களவித்தாரம், போர்க்களம். இதன் சிறப்பைப் பூதவேதாள வகுப்பு எனப்பாடியவர் அருணகிரிநாதர். இவர் கிளியாகி முருகன் புயத்திலிருப்பர். 18

தனதன் னநனத் நான நத்நத் - தனநான

புகழ்நண் ணுதவர்க் கான இச்சைப் - படிபோவார்
பொரும்இந் நாளௌைப் பேணு தற்குச் - சிகிமீதே
இகலொன் னர்கெடச் சாடும் வெற்றிக் – கதிர்வேலோ(டு)
இருமின் னர்களுக் கூடு பட்சத் – தொடுவாராய்
மகமந் நாண்முடித் தோர்தொ ழப்பொற் – கிரியேபோல்
வரும்அம் மேடமிக் காய்வு றச்சற் - றிவர்வோனே
திகழ்உண் ணுமுலைப் பேதை பெற்றுத் - தருபாலா
திருவண் ணமலைக் கோபு ரத்துப் – பெருமாளே.

மேடம் – ஆட்டுக்கடா. அது யாகத்தினின்று தோன்றியது அதை முருகன் வாகனமாக ஏறி அடக்கினர் என்பதாம். 19.

தானதன தந்ததன தானதந்த—தனதான

பாடியப டிக்குநட வாதல்கண்டு
வாடுவதொ ழித்துவிளை யாடிஅன்பர்
பாதமலர் விட்டசிறு தூள்சுமந்த தலைமீதே
பாதுகைத ரித்தசிறு தாள்பொருந்த
வேதமுடி வைக்கருணை யால்மொழிந்து
பாரதிமு தற்புகழு மேன்மைதந்து குறுகாதே
நீடியச டைப்பரம னுரும்அன்று
வாரிதிகு டித்தமுனி வோனும் என்று
நேயமுற வைக்கவென நாடுகின்ற நினைவோடே
நீலகிரி ஒத்தமயில் மீதிரண்டு
மாதர்அரு கிற்றிகழ வேலணிந்து
நீவருத லைக்கருதி நான்மெலிந்த தறியாயோ

கோடிமலை யுற்றகவு மாரார்தொண்டு
நாடியவ ருக்கினிய வாறுசென்று
கூறியது திக்குருகி ஆடுகின்ற குமரேசா
கூதளமு டித்தவன வேடர்மங்கை
மேவியத னிப்பரணின் நேர்குனிந்து
கோலொடுகி ழத்தவசி போல்நடந்த முருகோனே
கேடிலரு மைப்புலவர் பாடல்விண்ட
போதும்அத னைக்கருதி டாதவண்டர்
கீழ்மையடை யச்சிறிது கோபமுங்கொள் குருநாதா
கேதகையி கழ்ச்சியுற நீடுகுன்ற
மேவும்நக ரிற்பெரிய கோயில்கொண்ட
கீழ்திசைந டுச்சிகரி மீதுநின்ற பெருமாளே

பாரதி – கலைமகள், வாரிதிகுடித்த முனிவோன் – கடல்நீர் முற்றும் உளுந்தளவில் உண்டவர் அகத்தியர், கூதளம் – ஒரு விதப்பூ, இது வேடர் புனைவது "கூதாள கிராதகுலி" என்பர் வள்ளியம்மையைப் பற்றி அருணகிரிநாதர் கந்தரநுபூதியில். கேதகை – தாழம்பூ, சிவன் அக்கினிமலையா நின்ற போது அடிமுடிகாணச் சென்றனர் திருமாலும் பிரமனும். மேலே அன்னமாகப் பறந்த பிரமன் தாழை மலரை உண்டு பண்ணி இறைவன் முடியிலிருந்த தெனப் பொய் கூறினன். எனவே பொய் கூறியதால் இறைவனுக்கு உரியதல்லாததாயிற்று என்பதாம். 20

*தனனத் தானன தானத் தனந்த—தனதானா*

கலகப் பாதகர் பாவத் தனங்கள்
பெறுதற் காசைகொள் வேனைச் சிணுங்கு
கபடத் தோதக மாதர்க் கிரங்கி —மயலாலே
கணையிற் பூவெறி வானைப் புகழ்ந்து
கெடும்நிட் டூரனை ஈனக் குணங்கொள்
கயமைக் காரனை ஆளத் துணிந்து —மயில்மீதே
நிலவைப் போலொளிர் சீர்பெற் றுயர்ந்த
வதனத் தேநகை தோணத் திகழ்ந்தென்
நினைவிற் கூடியு லாவற் கிசைந்து —வருவாயேல்
நிமிடத் தேஇக லோரைத் தடிந்து
மலரிற் போதன்மு னுளிற் பகர்ந்த
நெறியுற் றோர்மகிழ் கூரச்செய் கின்ற(து) அரிதாமோ
உலகைத் தேர்உரு வாகச் செய்நண்பர்
விடையிற் றேவியொ டேறித்தன் அன்பர்
உயிரைப் போல்வரு வார்நெற் றியின்கண் —அருள்பாலா
உதரத்(து) ஓர்பணி சூழ்பொற் பணைந்து
முதலிற் பூசைகொள் வீறுற் றதந்தி
உடனெப் போதினும் ஆடித் திரிந்த —துணைவோனே

அலகைப் பேருரு வால்அச் சமிஞ்சி
இயலிற் சீர்சிறி(து) ஓதித் தயங்கி
அழும்நற் கீரனை வாழ்வித் தசெங்கை வடிவேலா
அகிலத் தோர்முனி வோர்சித் தர்,உம்பர்
புகழ்சித்(து) ஒய்வில தாடிச் சிறந்த
அருணைக் கோபுர மாடத் தமர்ந்த பெருமாளே

பாவத்தனம் - கெட்ட வழியிற்றேடிய பொருள். கணையிற்பூஎறிவான். அம்பாகப் பூக்களை விடுபவன் மன்மதன். வதனம் - முகங்கள் நெறி - சமயங்கள் ஆறு. உலகைத் தேராகக் கொண்டவர் சிவபிரான். திரிபுர சங்காரத்தின் போதாகும். விடை–இடபம். உதரம்–வயிறு. பணி – பாம்பு. விநாயகர் வயிற்றில் பாம்புக் கச்சிருப்பது காண்க. அலகைப் பேருரு - பேயின் பெரிய வடிவம். 21

*தனனதன தானதந்த தந்த – தனதான*

மதனன்விடு பாணமுங்க மழ்ந்த
களபமணி வார்தனங்கு லுங்க
வருமகளிர் ஊடலுந்தொ டர்ந்த கனல்போலாம்
வறுமையொடு நோய்களுஞ்சி னந்த
பகைவர் சொல்அ கோரநிந்தை யுங்கொள்
மனவிசன மாறியுன்ற னன்பர் வழியேபோய்
முதன்மையெனும் வேதமந்தி ரங்கள்
அரனருள்வ தானதந்தி ரங்கள்
முழுமையினு மேவிநின்ற தென்ற பொறியாலே
முகமலர்கள் ஆறும்வென்றி துன்று
புயமலைகள் ஆறிரண்டும் அம்பொன்
முளரிநிகர் தாள்களுந்தெ ரிந்து பிழையேனோ
சதவிதவி னோதம்ஒன்ற வந்து
கனவில்வினை யாடிமுன்ப கர்ந்த
தமிழ்மொழிக ளால்வினைந்த தெம்பை அறிவோனே
தனனதன தானதந்த தந்த
எனநடனம் ஆடுகின்ற நம்பர்
தழல்விழியி னூடுவந்து யர்ந்த குருநாதா
கதலிவிடு தாறுலைந்து தென்றல்
வருமளவி லேஉதிர்ந்து நைந்த
கனியுதவு தேனிறைந்த பைந்தண் வயலாலே
கவினுறுகெ டாநலந்து லங்கும்
அருணைமுது கோபுரம்பு ரந்து
கருணைமக மேருவென்ற மர்ந்த பெருமாளே

முளரி – தாமரைமலர் சதவிதம் - ஆயிரவகை. கதலி-வாழை தாறு – குலை 22

தனனத் தனதன - தனதானு

கவலைக் கடலிடை - முழுகித் தளர்வது
கழியத் திருவருள் பெறுமேலோர்
கமலத் திருவடி - மலருற் றுதிர்பொடி
கமழ்பொற் பிலகிய தலையோனும்
இவனைக் கடல்புனை - உலகத் துளசிலர்
இகழப் பிரிவது முறைதானே
எழில்முற் றியமயில் முதுகிற் கதிரயில்
இலகத் தினம்எதிர் வருவாயே
பவளக் கிரிநிகர் – வடிவைக் கருதுநர்
பகர்முத் தமிழணி புயவேளே
பதுமத் துறைதரும் - அயனைக் கறுவிய
பழமைக் குருபர முருகோனே
அவல்எட் பொரிகனி - வடைஒப் பனநுகர்
அருமைக் களிறெடு வருவோனே
அருணைப் பதிபுகழ் - சிகரிக் கிடைவட
அருகிற் றிகழ்தரு பெருமாளே

இவன் - தற்சுட்டு, அடியவர் பாததூளியைத் தினமுமணிபவர் சுவாமிகள். 23

தானதனத் தானன தானன - தனதானு

ஆரணமுற் கூறிய வாசக – மூலமதைத் தேறிய தேசிகன்
ஆகுமுனைப் பாடிய பாவலர் மலையாதே
ஆறுமுகத்(து) ஓர்பர மேபல - கோடிநெறிக் கூடும்உ லாவுதல்
ஆரறிகிற் பார்எனு மேலவர் மெலியாதே
காரவுணப் பாதகர் தீமையின் – நூறுமடக் காகிய தீதுறு
காதகருக் காண்மையும் மேன்மையும் உயராதே
கானமயிற் றோகையின் நீழலில்-வேலணிமற் றோளுடன் நீவரல்
காணநினைத் தேன்மிக வாடிய தறியாயோ
பூரமதிற் போய்வரு பாரதி - நூலறியப் பேசிய சீர்பெறு
போதகசிற் கோலம காரத முருகோனே
போகிமுதற் றேவர்கள் யாவரும் - நாடிமிகப் பேணிய சேவக
பூரணவுற் சாகம்நி லாவிய பெரியோனே
சூரன்முதற் றனவர் ஊர்கெட - வாரிதியிற் றாளெழ மோதிய
தோள்களையெப் போதினும் நாடுநர் —குருநாதா
சோலைவளத் தால்உயர் சாரலில் - வேடுவர்கைக் கோலொடு லாவிய
சோணகிரிக் கோபுர மேவிய —பெருமாளே

பூரமதிற் போய் வருவாள் - கலைமகள், பூரத்தை வாகனமா யுள்ளவள். பூரம் அறுபத்து நான்கு கால்களை யுடைய சீவன். கலை

கள் அறுபத்து நான்கு கலைகட்கும் மேற்பட்டவள் என்பது கருத்து. போகி - இந்திரன். கைக்கோல் - கையிற் கொண்ட அம்பு. சோணகிரி-திருவண்ணமலை. சோணசலம், சோணசைலம் யாவும் ஒன்றே. 24

முற்றிற்று.

## படை வீட்டுத் திருப்புகழ் 36ல் - 25வது
## திருவருணைத் திருப்புகழ்

*தனதான தத்த தந்த - தனதான*

பயிலாக மத்து ரைத்த - முறைதீ தெனத்த வித்த
பழிகாரர் சொற்ப கட்டில் மருளாதே
படிறேமி கப்ப டித்த - மதவாத ருக்க டுத்த
படிபேசும் அற்பர் பக்கல் அணுகாதே
மயில்வாக னத்தி ருக்கும் - முருகாவெ னத்து தித்து
மகிழ்வார்க ளைப்ப ழித்து நசியாதே
வளர்வேய்வ னத்தி டத்தில் - ஒருநாள்எ னக்களித்த
வரமான தைக்கு றிப்ப தறியாயோ
கயிலாய வெற்பெ டுத்த - புயராவ ணற்செ குத்த
கணையோன்வ குத்து முற்சொல் புகழோனே
கருணாக ரக்கு றத்தி - தினைமா வினைப்பு சித்த
கணமேமி கப்ப ருத்த புயவேளே
அயில்வேல்வி டுத்த ரக்கர் - குலம்நீ றெழப்ப டுத்தி
அமரேச னைப்பு ரக்கும் இளையோனே
அடியார்மி கப்ப டைத்த - புகழால்உ யர்ச்சி பெற்ற
அருணாச லத்தி லுற்ற பெருமாளே
வேய்வனம் - மூங்கிற்காடு. (திருநெல்வேலி) 25

---

## திருவண்ணமலை ஏழிளையனார் திருப்புகழ்

### காப்பு - வெண்பா

வாழி அருணையென்ன வண்ணத் திருப்புகழ்ப்பாட்(டு)
ஏழிளைய னார்க்கும்ஒவ்வொன்(று) யான்பாட - வீழிக்
கனியிதழ்ச்செவ் வாய்க்குறத்தி கானகத்தில் அஞ்சத்
தொனிதரு(ம்)மால் வேழம் துணை.

## நூல்

குறிப்பு :- *தனன தனத் தானனத் தனன - தன தான*

ஒருகிளியைப் போல்உருக் கொடுபொன்
நகரியினிற் போய்எழிற் றருவில்
உறுமலரைப் பூமியிற் கொணரும் இயல்பாலே
உயர்வுறுமெய்ச் சீர்பொறுத் தவனை
நிகர்புகழ்பெற் றுடிடக் கருதி
உனதுதிருத் தாள்களைத் தினமும் நினையேன்மேல்
அருள்பெருகிக் கோமளப் பவள
வடி(வு)இலகத் தேடிஅப் படியென்
அறிவறியக் கூறிவைத் திடுமெய் மறையாதே
அழகியபொற் றேகையுற் றயிலொ(டு)
இருமகளிர்க் கூடுதித் தளவில்
அதிவிதவித் தாரமுத் தமிழை அணிவாயே
குருபரசிற் கோலவித் தகமெய்
அடியர்மனப் பூவினிற் குடிகொள்
குகவெனும்நட் போர்மொழிப் படிசெய் தொழிலோனே
குருதிநிணத் தாறலைத் தொழுக
அலகைமிகக் கூடியுட் பரிவு
கொளஅசுரச் சேனையிற் சமர்செய் திறலோனே
செருவிலெதிர்த்(து) ஆடகக் கிரியில்
வருமவனைப் போயெடுத் துணவு
செயுமவருக் கானமெய்த் துணைவன் எனும்வீரா
சிவசமயத் தோர்மு தற்பலரும்
வழிபடும்நற் சோணவெற் பிலகு
திருவருணைக் கோபுரத் தினைய பெருமாளே

*சீர் பொறுத்தவன்* – அருணகிரிநாதர். *குருதி* - இரத்தம். *நிணத்து ஆறு* – மாமிசம் இவற்றாலான ஆறு. *ஆடகக்கிரி*-பொன் மலை. இவ்வடிவில் வந்தவன் அனலாசுரன். அவனை உண்டவர் கணபதி. 1

*தனன தானனத் தந்தத் தனன—தன தான*

பொதிய மால்வரைச் செஞ்சொற் றமிழை
இகழு மூடர்கெட் டன்பிற் பெரிது
புகழு வார்களிக் கும்பொற் பிலகு வதனாலே
புவிமி ளுள்சலிப் பின்றிக் குளிர
வெருளு றுதுவப் பின்றிப் புயல்கள்
பொழியு நீர்மிகச் செந்துத் திரள்கள் மெலியாதே

சதியெ லாம்ஒழித் தின்பக் கடலின்
முழுகி வாழ்வுறக் கண்டிட் டிணையில்
சரத ஞானமுற் றெந்தப் பவமும் அணுகாதே
சலச மாமலர்க் குஞ்சற் றுயரும்
உனது தாள்களுட் சென்றுற் றவர்கள்
சதுரெ லாம்நினைக் குஞ்சற் குணம தருள்வாயே
விதிமு ளினிற் கெஞ்சிக் கதறி
அவச மாய்மிகக் கும்பிட் டுடலில்
வெயர்வை ஆறெனச் சிந்தச் சிறிது முனிவோனே
விபுதர் வாய்விடத் திண்கைச் சமர்செய்
தகுவர் சேனையைக் குன்றைக் கடலை
விரைவில் மோதும்உத் துங்கத் தயில்கொள் குமரேசா
அதிக மானசிற் றுண்டிக் குவியல்
எதிரி லேபடைக் குஞ்சற் சனர்முன்
அவிரும் ஆனையைச் சிந்தித் தொருபெண் முலைசேர்வாய்
அடிய ராமவர்க் கன்பைப் பெருக
உதவு சீர்அழற் குன்றுக் கருகில்
அருணை மாநகர்க் கம்பத் திளைய பெருமானே

சதி - துயரம், தாள்களுட்சென்றுற்றவர்கள் - பிறவாத வீடு பெற்ற மேலோர், விதி - பிரமன், விபுதர் - தேவர்கள், உத்துங்கம் - வீரம்.

2

தனன தனதன தானன தனன—தனதான

களபம் அணிதரு பூரண கலசம்
அனைய துணைமுலை வேசியர் தமது
கபட மதில்வச மாகியென் அருமை குலையாதே
கரிய முகில்பொதி சோலைகள் பெருகு
மலைகள் தொறும்வழி பாடுசெய் துனது
கருணை பெறுமவர் பாடிய கவியை இகழாதே
பளப ளெனும்வடி வேலினை, அவுணர்
அவச முறமுரல் சேவலை, இணையில்
பசிய மயிலினை, நாடொறும் நினைதல் மறவாதே
பழைய மறைபகர் மூவிரு பொறியும்
உதவு திருவருள் வாரியில் அடிமை
படிய ஒருபொழு தேனும்என் விழிமுன் வருவாயே
துளவ மணிநெடி யோன்,மலர் வனிதை
மருவும் அழகிய மால்புகழ் பெருமை
தொலைவில் சரவண னாகிய குமர குருநாதா
சுரரும் முனிவரர் ஆதிய பிறரும்
அருமை அருமையெ னநுவல் பெருமை
துதைய வருபல காவடி விழையும் முருகோனே

அளவில் கனிகளும் மோதக மலையும்
விடலை அவல்பொரி நேர்பல வகையும்
அமுது செயுமவர் ஆவியை அனைய துணைவோனே
அசர சரமெனும் ஓரிரு பகுதி
உயிரும் உயர்பர வீடுற நிலவும்
அருணை நகர்வட வீதியில் இளைய பெருமானே

மூவிருபொறி - ஆறெழுத்து, மலர்வனிதை - திருமகள், அசர – சரம். நிலையுயிர்கள் மரம் முதலியன அசரம். விலங்கு, மனிதர் சரம். 3

*தனனதன தாந்த தனதன தனன—தனதான*

கபடமிகு தூர்த்த நினைவுறு கொடியர்
இகழ்சிறுமை வார்த்தை யெனுமழல் சுடுதல்
கருதிமன வாட்ட மடைவது முழுதும் ஒழியாதோ
கலகமிடும் வாட்கண் வனிதையர் களப
முலையில்அதி வேட்கை யுறுமவர் தமது
கடைகள்தொறும் ஏற்று மெலிவுறு துயரும் நழுவாதோ
சபலமற மாற்றி உறுதிகள் முழுதும்
உதவுதிரு நீற்றை இகழ்பவர் மருவு
சமயமதில் மூர்க்க முழுமையும் நொடியில் அழியாதோ
தனனதன தாத்த தனவென நடனம்
இடுமயிலின் மேற்கை அயிலுடன் இருவர்
தனதருகில் வாழ்க்கை யுறஎதிர் இலகி அருள்வாயே
இபமுகனை மாய்த்து மயல்வரை பொடிய
முனியும்உயர் சீர்த்தி யுடையவன் முருகன்
எமதுகுறை தீர்க்கும் எனமொழி பவரை அகலானே
இருபதுகை நீட்டி அமர்செயும் அவனை
ஒருகணையில் வீழ்த்தி இமையவர் புகழ
எழில்மிகும்அ யோத்தி தனில்வரு மொருவன் மருகோனே
அபரிமித மாச்சொல் உணவுகொள் களிறு
வெளிரும்ஒரு கோட்டு முகம்உள கடவுள்
அணிகயிறு தோட்டி யினனுடன் வருசண் முகவேளே
அருள்வழியில் நாட்டம் உடையமெ யடியர்
பரவுதுதி கேட்டு வரமுழு துதவி
அருணைவட மேற்கி லமர்தரு மிளைய பெருமாளே

தூர்த்தநினைவு – கெட்டஎண்ணம், இபமுகன் - யானைமுகத் தாருகாசுரன், மயல்வரை - கிரவுஞ்சமலை, இருபது கை – இராவணன், அபரிமிதம் - அளவில்லாத, தோட்டி - அங்குசம். 4

*தனன தனதன தானன தனன - தனதான*

கமல மலர்மிசை நாடொறும் அவிரும்
மகளிர் இருவரு மேவிடும் உரிமை
கருதி உனைநினை வார்மன உறுதி தளராதே
கதற உயிர்வதை யேபுரி பவர்கள்
சமயம் நலமென ஓதிடு மடையர்
களிகொ டுலவுத லால்முகில் வெருவி ஒளியாதே
விமல மவுனம ஞேலய புனித
பரம ரகசிய மேவிய முனிவர்
வெருளும் நடையுறு பாதகர் பெருமை அடையாதே
விரத முறுகவு மாரர்கள் அறிவும்
உடல முழுதணி நீறும்என் நினைவில்
மிளிர ஒருகன வூடயில் கொடுமுன் வருவாயே
சமர ரணகள வீரர்கள் பரவு
குமர குருபர ஞகிய முருக
சரண மெனுமவர் பாலருள் பொழியும் விழியானே
சரப வடிவுகொ(டு) ஆயிர முடிகொள்
அரியின் உதிரமு ளுள்நுகர் பரமர்
தமது தழல்விழி யால்வரு மகிமை யுடையானே
பமர நிரைகள்மொ ரேலென நுகர
ஒழுகு மதமுடை யானொடு சிறிது
பகைசெய் தொருபர தேசியில் வடிவு கொளும்வேளே
பதறி அயன்அரி தேடமுன் வளரும்
அருணை வரைதரு சேயென நிலவு
பவள மலைமிசை வாழ்வுறு மிளைய பெருமாளே

நரசிங்கமாகித் திருமால், இரணியனைக் கொன்ற போது, ஆரவாரம் செய்த நரசிங்கத்தை இறைவன் சரபவடிவாகி அடக்கினரென்பதாம். ஆயிரம் சிரசுடன் வந்தனர் நரசிங்கர். 'அரிமா முகங்கள் ஓராயிரத்தோடுற்று அரிகனகன் எரிநாணும் செங்குடர் மாலையிட்டு ஆடினர்' என்பதாலறிக. 5

*தனதன தான தனதனந் தனன – தனதான*

மதனவேள் ஏவு பனிமலர்க் கணைகள்
சுடுவதால் ஆவி மறுகியெப் பொழுதும்
மகளிர்மாய் மால மதைமிகக் கருதி அழியாதே
மடமைசேர் மூடர் மனைகளிற் றினமும்
அலைவதே யோகம் எனநினைத் தருளில்
மறதியாம் வீணர் உறவினைச் சிறிதும் மதியாதே
சிதறுதேன் மாரி அனையநற் கவிகள்
பகருமே லோர்கள் உரிமையிற் பழகு
திறலுளார் கூறு மொழிகளிற் பழுது நினையாதே

சிவபிரான் நீடு பொதியையிற் குடிகொள்
முனிவனோர் சீல ருடன்உரைத் தைஓர்
செவியில்நீ ஓதி டெனஉனைப் பணிய வரமீவாய்
முதலையால் வாடு மதகரிக் கருளும்
நெடியமால் ஆழி கொடு,பகற் பொழுதை
முதிர்இரா வாக முனமியற் றியவன் மருகோனே
முதல்வி,ஆ லால மணிமிடற் றிறைவன்
அருகில்வாழ் வான கவுரி,உத் தமிபொன்
முளரியாள், பேணும் உமையவட் கினிய புதல்வோனே
அதலம்வாழ் சேடன் எனுமணிக் கயிறு
வயிறுசா யாமல் அணிபுகழ்க் கடவுள்
அறியமே ருவில் ஒருகுறக் கொடியை அணைவோனே
அமரர்சே ஞதி பதியெனப் புலவர்
தலைவனும் ஞான மணியெனப் புகழும்
அருணைவே ளாளர் தெருவிடத் திளைய பெருமாளே

கேசந்திரனை யானையை முதலை பற்றிய போது சக்கரத்தை விட்டு முதலையைக் கொன்று காத்தவன் திருமால் கண்ணனை சமயம் அருச்சுனன் சபதத்தைக் காக்க வேண்டிச் சக்கரப்படையை விட்டுச் சூரியனை மறைத்துப் பகற்பொழுதை மாற்றி இரவாக்கி சயித்ரதனைக் கொல்ல உதவியவர் திருமால் என்பதாம். 6

தனதான தத்த தனை - தனதான

பலபாடல் செப்பி யுனது – வழிபாடி யற்று முனிவர்
பதவாரி சத்தின் உரிமை வழுவாதே
பதையாத சித்த முடைய - கொடியோரை மெச்சு மடையர்
பகையேவி ளைக்கும் நிலைமை தவருதே
இலவேயெ னச்சொல் இழிவு – பெறுலோபர் பக்கல் அணுகி
இரவாத முத்தர் மொழியும் வழிபோவேன்
எழில்வேல் எடுத்து நடன – மயிலேறி முற்று மகிழ்வொ(டு)
இருமாத ருக்கு நடுவில் வருவாயே
சலசாத னத்து விதியை – ஒருநாளி டித்து நெடிய
தளையூடி ருத்தும் மகிமை உடையோனே
சரணாயு தத்தின் உருவம் - வரைகேத னத்தின் அருமை
தனைநாடும் நட்பர் உணர்வில் வளர்வோனே
மலர்மாதும் வெட்கும் வலவை - புணர்தோள்ப டைத்த களிறு
வடலால்ம றத்தி மருவும் மணவாளா
மழையால்வ ளப்ப மலியும் - அருணாச லத்தில் அளவில்
வடிவாகி நிற்கும் இளைய பெருமாளே

பதவாரிசம் - திருவடித் தாமரை. இரவாத - யாசிக்காத. சலசாதனம் - தாமரைப் பூவின் இருக்கை. சரணாயுதம்-காலாற்போர் புரியும் கோழி. 7

### பயன் - வெண்பா

ஆழியுடைப் பார்புகழும் அண்ணா மலைத்தலத்தில்
ஏழியல்பா நிற்கும் இளையோன்மேல் - தாழிதயம்
உள்ள திருப்புகழான் ஓதுகவி ஓரேழும்
கொள்ளவல்லார்க் கில்லை குறை.

தாழ் இதயம் – பணிவுள்ள மனம்.

முற்றிற்று.

—00—

சிவமயம்

## 3. திருவண்ணாமலை - அண்ணாமலையார் பதிகம்

### காப்பு - வெண்பா

அன்பர்பலர் போற்றுதிரு அண்ணா மலையான்மேல்
இன்பத் தமிழ்ப்பதிகம் ஏத்துதற்குப் – பொன்பரவு
மாய னெனநீண்ட வல்லாளன் கோபுரத்தில்
மேயதெய்வம் காத்தருளு மே.

### நூல் - கொச்சகக் கலிப்பாக்கள்

நீயிருப்ப துணராார்போல் நீணிலத்தார் மனைதோறும்
போயிரந்து நான்ஒருவன் புலர்கின்ற தறியாயோ
கோயிலுக்குள் வந்நார்தம் குறைமுழுதும் தீர்ப்போனே
சேயிழையாள் பாகத்தாய் திருவண்ணா மலையானே. 1

திங்கள்நிகர் வெண்கவிகைத் தேர்வேந்தர் திறல்அஞ்சார்
தங்கள்மனம் வாட்டமுறத் தகுங்கொல்லோ சற்றிரங்காய்
அங்கண்ஒரு மூன்றுடையாய் ஆரணத்தோன் தலைகொண்டாய்
செங்கண்மால் அறிவரிய திருவண்ணா மலையானே. 2

கன்னியர்தம் முலைப்போகம் கருதிமனம் கரைவதன்றிப்
பொன்னிடத்தும் ஆசைகொண்டு பொய்யரொடும் போவேனோ
தென்னிலங்கைக் கோன்கதறச் செயும்விரல்ஒன் றுடையானே
சென்னியில்வெண் பிறையுள்ளாய் திருவண்ணா மலையானே 3

நீறணிந்துன் ஐந்தெழுத்தும் நினைகின்ற நெறியாளர்
பேறடைந்து வாழ்வதெண்ணிப் பெரிதுமனம் தளர்வுற்றேன்
கூறணைந்த மங்கைநல்லாள் கொங்கையணி குங்குமச்செஞ்
சேறணைந்த மார்பகத்தாய் திருவண்ணா மலையானே 4

பேயனைய குணத்தாரும் பெரிதிகழத் தடுமாறும்
நாயடியேன் விரும்பியவா நலம்புரிய வல்லாயோ
தூயமலர்த் தும்பையணி தோளுடைய சுந்தரனே
தீயனைய வடிவத்தாய் திருவண்ணா மலையானே 5

நின்கோயிற் பணிமுழுதும் நிறைவாதல் கண்டதனல்
என்கோது முழுதொழிவ(து) என்றென்றே இடைகின்றேன்
வன்கோலம் அறியாத மலர்த்தாள்எம் பெருமானே
தென்கோனை முன்அடர்த்தாய் திருவண்ணா மலையானே 6

பாவெழுதும் தொண்டரொடு பழகிஉனைப் பரவாமல்
கோவெழுதும் முலையார்தம் கோரணியிற் றளர்வேனே
பூவெழுதும் நெடுங்கோட்டுப் பொருப்பென்னப் பொலியுமெழிற்
சேவெழுதும் கொடியுடையாய் திருவண்ணா மலையானே 7

மகவான்றன் மகனொருவன் மற்புரிய மகிழ்வாகி
இகல்வாளி ஒன்றளித்தாய் என்பதுவும் பொய்யாமோ
பகலாதிச் சுடர்மூன்றும் பழிக்கரிய விழியென்னத்
திகழ்கோலம் உடையானே திருவண்ணா மலையானே. 8

வல்லாளன் கோபுரத்து வாரணமும், மயிலேறிப்
பொல்லார்தம் குலமழிக்கும் புனிதனும்நின், மகவன்றோ
வில்லாக வரையேந்தி மேவலரைப் பொடியாக்கச்
செல்லாமெய்ப் புகழ்கொண்டாய் திருவண்ணா மலையானே. 9

கழுமலர்த்தூர்ப் புலவன்முதற் கழறுமொரு நால்வருக்கும்
விழுமியபே றளித்ததுண்டேல், வினையொழித்தென் றனைஆள்வாய்
தொழுமவருக் கெளியானே, சூலமழு மானேந்தும்
செழுமலர்க்கை நான்குடையாய் திருவண்ணா மலையானே 10

செந்தமிழ்ச்சீர் மலிபான்மைத் திருவண்ணா மலையானைச்
சந்தனமால் வரையீன்ற தண்பொருநை வடகரையில்
வந்ததிருப் புகழ்க்காரன் வழுத்தியவை பகர்வாரைக்
கந்தமலர் மீதிருக்கும் காரிகையார் அகலாரே. 11

அம்மை துணை

## 4. உண்ணாமுலையம்மை பதிகம்

### காப்பு — வெண்டளைக் கலிப்பா

அண்ணா மலையாருக்(கு) ஆனந்தம் ஈந்தருளும்
உண்ணா முலையாள்மேல் ஓர்பதிகம் பாடுதற்குத்
தண்ணார் பெருங்கருணைத் தந்திமுகப் பெம்மானும்
விண்ணோர் போற்றும்வைவேல் வித்தகனும் காப்பாமே

## நூல்—அறுசீர்ந் தாழிசைகள்

ஆர்கம ழுஞ்சடை நாயக னுருடன் அடல்மால் விடை யதன்மேல்
வார்கடல் சூழ்புவி வாழ்வுற என்னெதிர் வரும்நாள் உதியாதோ
பேர்கரு தித்தொழு மெய்யடி யார்களைப் பேணும் பெரியாளே
ஓர்கனல் வெற்பரு கேவிளை யாடிடும் உண்ணா முலையாளே. 1

அத்தரு ணத்திலவ் வாறிருந் தம்மொழி அறைந்தா யெனலுண்டேல்
இத்ததி யிற்சிறி தேனும்என் மீதுளம் இரங்கா விதம்என்னோ
முத்தமிழ் கற்றஒ ருத்தன்உ வப்புற முன்னாள் அமுதிட்டாய்
உத்தமர் வாழரு ணைப்பதி யிற்றிகழ் உண்ணா முலையாளே. 2

அப்படி வாழ்வது நாடிமு யன்றிடும் அடியேன் மனம்இந்நாள்
இப்படி வாடிவ ருந்திடக் கண்டிடல்! என்னோ அறிகில்லேன்
மைப்படி யுந்திருக் கண்டம்உ ளாரிடம் வாழுஞ் சிறுமானே
ஒப்பறு சீரரு ணைப்பதி மேவிய உண்ணா முலையாளே. 3

தண்டொடு சூலமெ டுத்துவ ருஞ்சமன் றன்னால் மெலியாமல்
கண்டொரு மெய்ப்பொரு ளும்தரு வாயெனக் கருதித் தளர்கின்றேன்
விண்டொடு வந்துல கத்துயிர் யாவையும் மேனா ளருள்அம்மே
ஒண்டொடி யார்மலி தென்னரு ணாபுரி உண்ணா முலையாளே. 4

பெண்மைதி ளைந்துகு கிக்கெடும் என்மனம் பெரியோர் நெறியேபோய்த்
தண்மைபொ ருந்திய ருந்தவ மேசெயும் தகையுற் றிடலென்றோ
வண்மைம லிந்தொளிர் அங்குச பாசவ னப்பொன் றியகையாய்
உண்மைவி ளங்கரு ணைக்கணி யாவளர் உண்ணா முலையாளே. 5

அற்பர்த லைக்கடை வாசல்தொ றும்தினம் அலையா துனைநாடித்
தற்பர மோனம்அ டைந்துன தம்புயத் தாளிற் கலவேனோ
நற்பணி லப்பணி சூடிய நாயகர் நாடுஞ் சிறுபேதாய்
உற்பலம் நேர்விழி யாய்அரு ணாபுரி உண்ணா முலையாளே. 6

பாழில்மு யன்றுகெ டுங்கொடி யோரொடு பழகித் தவியாமல்
ஏழிசை முத்தமிழ் பாடிஉ வப்புறும் இயல்பென் றருள்வாயோ
ஆழிவ ளைந்தபு விக்கணி யாவளர் அண்ணா மலையாளே
ஊழிய னந்தம்அ றிந்தவ ளேஎழில் உண்ணா முலையாளே 7

ஐவர்க ளுந்துதி செய்யும்நின் மெய்ப்புகழ் அறியா தவர்போலப்
பொய்வலி கண்டுமெ லிந்துவ ருந்திடல் போமா றருள்கூர்வாய்
நெய்வழி கொன்றைம லர்த்தொடை யாரிடம் நிற்கும் பெருவாழ்வே
உய்வது ணர்ந்தவர் சேரரு ணைப்பதி உண்ணா முலையாளே. 8

முத்திய ளிக்கும்மு தற்குரு வாகிய முருகோ னதுகையில்
சத்தியெ னக்குடி கொண்டனை என்பது தவறென் றிடலாமோ
பத்திவ லைப்படு பைங்கிளி யேதமிழ்ப் பாவலர் தம்உள்ளத்(து)
உத்தியெ னத்திகழ் வாய்அரு ணாசலத் துண்ணா முலையாளே. 9

ஆறுநெ றிக்குமொர் ஆதர மாகும்என் றகிலத் தினரெல்லாம்
கூறுமெ ழிற்புகழ் கொண்டுள சங்கரன் கொள்ளுந் தவம்நல்காய்
ஏறுவ ரைந்தகொ டிக்குரி யார்மகிழ் இளமான் அனையாளே
ஊறுத விர்ப்பவ ளேஅழல் வெற்பமர் உண்ணு முலையாளே 10

ஓங்கிய சீரரு ணுபுரிக் கோயிலின் உண்ணு முலையாளைத்
தீங்கிலர் வாழ்வுறும் நெல்லையில் வந்துள சிறுவன் பகர்பதிகம்
தாங்கிய நெஞ்சினர், பாடிய நாவினர், தமரா மவர்தாமும்
தேங்கிய செந்தமிழ் வாரியின் மூழ்கிய சீர்பெற் றுயர்வாரே 11

முருகக் கடவுள் துணை

# 4. திருவருணை-முருகப் பெருமான் பதிகம்

## *காப்பு - வெண்பா*

மெய்யடியார் செய்தவத்தை வேண்டி வினைதீரப்
பொய்யடியேன் பாடல் புகல்வதற்குச் - செய்யபுகழ்த்
தென்னருணைக் கோயிற் சிகரி வடவருகிற்
சொன்னவடி வேலான் றுணை.

## *நூல் - அறுசீர்த் தாழிசைகள்*

நீறுபு னைந்தவ ராகிய வுத்தமர் நெஞ்சம்வ ருந்தாமல்
சீறும்அ ராவணி தோகையின் மீதொரு திருவுரு ஒளிராதோ
கீறும திப்பிள வணிதரு செஞ்சடை கிளர்சிவ பெருமானல்
வீறுமி குந்திரு வருணையில் வந்துயர் மெய்யடி யார்தவமே 1

வன்பர்செ யுந்தொழில் கண்டுல கந்தினர் மனமிக வெருளாதே
அன்பர்கு ழாமில கந்தமி யேன்மகிழ்(வு) அடைகுவ தெந்நாளோ
பொன்பணி யுங்கலை யுங்கொடு வந்தொரு பொய்நகை புரிவோராம்
மின்படு சிற்றிடை யார்மயல் நோய்தவிர் மெய்யடி யார்தவமே 2

இத்தனை கோடிம னுத்திர ளூடுனை எண்ணிமி கப்பேணும்
பத்தன்ஒ ருத்தன்உ ளானென இன்றொரு பருமழை பொழியாதோ
முத்தமிழ் கற்றுமு றைப்படி யேகுறு முனியென மகிழ்கூரும்
வித்தக ராகிவி ளங்கிய சீர்திகழ் மெய்யடி யார்தவமே. 3

மாதவ நீதிய றிந்தவ ரின்றென வையம்இ கழ்ந்தோதும்
போதடி யேன்மனம் வாடிவ ருந்தல்பொ றுப்பது நன்றேயோ
காதள வோடிய கண்மட வார்தரு கலவியின் மருளாலே
வேதமும் ஆகம நூலும்உ ணர்ந்துள மெய்யடி யார்தவமே 4

கற்பனை நூல்கள்உ ணர்ந்தவ ரோடுக லந்தும யங்காமல்
சிற்பர யோகசி வோகம்அ டைந்தவர் சேகரம் ஆவேனோ

மற்படு தோள்மிசை மான்மழு வைத்தவர் வாழ்வுறு மூதருணை
வெற்பரு கிற்சிக ரிக்குக ணைத்தொழு மெய்யடி யார்தவமே 5

இண்டுநெ ருங்கவ ருந்திய மென்குழல் என்றுழ லுந்தமியேன்
மண்டுவ கைக்கட லூடுகு ளிக்கும் வனப்புற வைப்பாயோ
தொண்டுபு ரிந்து,து ணிந்து,து றந்துள தூயபெ ருந்தகையால்
விண்டுமு தற்பகர் வானவ ரும்புகழ் மெய்யடி யார்தவமே. 6

திங்களை நேர்முக மங்கைய ராமவர் செய்துய ரதனாலே
இங்கடி யேன்மெலி வுற்றது கண்டும்இ ரங்குகி லாய்அந்தோ
பங்கமு ருதுப முத்துலை யாதுயர் பத்திந யத்தாலே
வெங்கண்அ ராவுறழ் கோபம றுத்துள மெய்யடி யார்தவமே. 7

சண்பையில் வந்தவன் அன்றுமு னிந்தெதிர் சாரணர் தம்மோடும்
திண்படும் நெஞ்சுக லங்கிட வாதுசெ யும்படி செய்திலையோ
வண்புகழ் கண்டும கிழ்ந்துகெ டாதுவ ருந்திஅ றஞ்செய்து
வெண்பொடி பூசிவி ளங்குந ராகிய மெய்யடி யார்தவமே. 8

சூரன்மு தற்பகர் பற்பல துர்ச்சனர் துங்கமொ ழித்துயர்விண்
ஊரவ ரும்புவி யோரும்வி ளங்கஉ பாயம்வி ளைத்திலையோ
காரண வுங்குழ லார்கள்வெ ருட்டிய கண்வலை யிற்கவலா
வீரமு டன்பர ஞானமும் ஒன்றிய மெய்யடி யார்தவமே. 9

நாவகம் உற்றவள் கேள்வனும் மாயனும் நக்கனும் என்றோதும்
மூவர்மு தற்பல தேவரும் உன்றனை முன்னுதல் வம்பாமோ
சீவன்வ ருந்தவ தைத்துடல் உண்டுசெ ழிக்கும்இ ழுக்கினராம்
மேவல ருக்கெம னேயென வாழ்வுறு மெய்யடி யார்தவமே 10

அருவமெ னப்பல ருஞ்சொல நின்றிடல் அவரவர் மனமேபோல்
உருவமெ டுத்துவ ரச்செயு மெய்ப்புகழ் உன்றிற மேயன்றோ
குருபர னைத்திரு வருணையில் உற்றுயர் கோபுர மும்தூணும்
விருதுபொ றுத்தமை நாடிவ ணங்கிய மெய்யடி யார்தவமே 11

விழவணி நீடிய அருணையி லன்புறு மெய்யடியார் தவமே
கழகந லத்தொடு சித்திக ளுந்தரு கதிவடி வாமென்னும்
குழவியெ னத்திக ழுங்கவு மாரர்கு லத்தொரு வன்பாடல்
பழவினை யாவும்அ றுத்துவி ரும்பிய பண்பும்வி ளைத்திடுமே. 12

— —

குருவே துணை

# 5. கோபுரத்து முருகக்கடவுள் பதிகம்

## காப்பு வெண்பா

கலிபோம் இருவினைபோம் காலனுக்குள் அஞ்சும்
கிலிபோம் பெருவாழ்வு கிட்டும் - புலியுரித்த
அந்தணனர் வாழும் அருணைநெடுங் கோபுரத்துக்
கந்தனையே சிந்தைசெய்தக் கால்

## நூல்—எண் சீர்க்கழில் நெடில் விருத்தம்

என்னுடன் நீ அன்றுரைத்த வார்த்தையெல்லாம் மெய்யே
என்றெண்ணி நின்பணிக்கே ஏக்கமுறக் கண்டும்
மின்னும்வடி வேலேந்தித் தோகைமயில் ஏறி
விளையாடி ஒருவசனம் விளம்பாத தேனே
பொன்னுலகத் தோர்களையும் புரந்தருளும் முருகா
புரைதீர்ந்த வெண்சேவல் புனைந்துளதோட் குகனே
மன்னுபுகழ்த் தென்னருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 1

தளர்கோல முனிவனெனத் தினைப்புனத்தி லேகித்
தமனியப்பா வையைப்பழிக்கும் தமிழ்க்குறத்தி தன்பால்
இளவேனிற் காலத்தே தென்றலந்தேர் ஊர்வாற்(கு)
இடைந்தார்போல் விளையாடல் இயற்றியதோர்ந் திலனே
களமூடு விடம்வைத்தார்க் கருளியதே சிகனே
கானமயிற் பரியேறிக் களிகூரும் முருகா
வளமோங்குந் திருவருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 2

தாமதர்தம் மனைதோறும் போயிரந்தும் வாடித்
தளர்கின்ற தமியேனைத் தண்கருணை விழியால்
சோமரசம் உண்டுமகிழ் பெரியோருக் காளாய்த்
தொழும்புசெயப் பணித்தருளிற் றேடமதோ சொல்வாய்
காமனுளம் நாணுமொழிற் கந்தபிரா னேஎம்
கவுமார நெறிபழுத்த கனியனைய குகனே
மாமலியும் சீரருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 3

கள்ளமிலா உள்ளன்பும் கலியணுகா வாழ்வும்
கருகாமல் வெளிருமல்; கவின்றதமிழ்க் கடலும்
புள்ளரசில் இவர்வானும் போற்றுபெருந் திறலும்
பொருந்தியுனக் கானபணி புரியும்நலம் வருமோ

தெள்ளமுத மொழித்தேவ குஞ்சரியாள் பாகா
சிகியேறி அயிலேந்தும் சேவகனும் முருகா
வள்ளலார் வாழருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 4

பொன்னிடத்தும் ஆசைகொண்டு புலர்கின்ற தமியேன்
பொருவரிய தமிழ்பாடிப் பொய்யொழிந்த நெஞ்சால்
உன்னிருதோள் கருதிநல்லோர்க் குறவாகிப் பொல்லார்க்(கு)
உருமேற்றிற் றிகழ்பகையாய் ஒளிர்வதென்றோ உரையாய்
கன்னியர்பாங் கிருக்கமயிற் பரியூரும் முருகா
கதிர்வேலும் வச்சிரமும் கணிச்சியும்கொண் டோனே
வன்னிமலை ஓங்கருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 5

தீதுமுழு மையும்வடிவ மான(து)ஒக்கும் தமியேன்
திருப்புகழால் உனைத்துதித்துன் சேவடியே கருதி
வாதுசெயும் பரசமயக் குலமெல்லாம் வெருண்டு
வணங்கிடக்கண் டிறுமாக்கும் வாழ்வுறும்நாள் உளதோ
போதுடைய நான்முகனைப் புடைத்தசெங்கைக் குகனே
புரமெரித்தோன் இடப்பாகம் பொருந்தியபே றதனல்
மாதுமையாள் மகிழருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 9

கஞ்சன்எழு தியஎழுத்தும், காமன்விடும் கணையும்
காலன்உறுக் கிடும்பயமும் கழிவதெண்ணி நான்உன்
செஞ்சரணத் துணைநாடி ஆறெழுத்துங் கூறிச்
செழுமலராற் பூசைமிகச் செய்வதுவும் பொய்யோ
வஞ்சர்அறி வரியதிருப் புகழுடைய முருகா
மலைதோறும் விளையாடி வரத்தகும்சண் முகனே
மஞ்சடரும் பொழிலருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 7

திண்பொலியும் நெஞ்சுடைய சாரணர்சொற் கேட்ட
செழியனுக்குச் சுரம்வருத்தித் தீர்த்தருள என்றே
சண்பைநகர்க் கவுணியரில் ஒருவன்மனைச் சேயாய்த்
தரணியில்வந் தவதரித்த தன்மையுளான் ஆரோ
நண்பினர்கள் வைதாலும் நகும்திருவா யுடையாய்
நாரணற்குச் சுடராழி நல்கியகைக் குருந்தே
வண்பெருகும் மூதருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 8

வீரமயேந் திரமழியத் தேவர்உல குய்ய
வேதமுடன் ஆகமத்தில் விளங்கும்நெறி ஓங்கச்

சூரன்முதற் றகுவர்களை வென்றவிதம் நாடித்
துதிகூறி நின்னடியார் தொழும்புசெய விழைந்தேன்
நீரணிந்த சடைப்பெருமான் நெற்றிவிழி வழியே
நெருப்புருவா வந்தவனே நெடுங்கதிர்வே லவனே
வாரணங்கூப் பிடும்அருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 9

தாழைமல ரைக்கெடுத்த பிரமாவும் மாலும்
சங்கரனும் நின்னருட்கே தவம்புரிவ தோரார்
ஏழையேன் மனத்திடத்தில் நீவலிய வந்தன்(று)
இயம்பியசொற் கருதியதால் இங்குவந்தேன் கண்டாய்
கோழைமனத் தோரறியாக் குமரனே நல் வல்லோர்
குறித்தபடி விளையாடும் கொள்கையுடைக் குகனே
வாழைவனம் சூழருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனே. 10

தேசிகனுத் திருவுருவங் கொண்டுமுன் னுள் வந்து
சிவபெருமான் றனக்கும்எழிற் செந்தமிழ்மா முனிக்கும்
ஆசிபகர்ந் தார்களுக்குட் சீரியனென் றேதும்
அருணகிரி நாதனுக்கும் அருள்வதுகேட்ட டைந்தேன்
வீசியதெண் டிரைக்கடலிற் பொருநையிற்செந் தழலில்
விடுத்ததமிழ் கொடுத்தாள விரும்பியவேல் முருகா
மாசிலவர் வாழருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடருவகில் மருவுகுரு பரனே 11

கானவண்டு பண்பாடும் காவிமலர் வாவிக்
கவினுகும் நெல்வேலிக் கவிப்புலவன் ஒருவன்
வானவர்போற் றியஅருணைக் கோபுரத்தின் கீழ்பால்
வாயிலுக்கு வடவருகில் மருவுகுரு பரனைப்
போனபிறப் பறிவித்த புண்ணியனென் றோர்ந்து
பொருவறுஞ்சீர் பெறுமாறு புகலுமிவை யுணர்வார்
பானலங்கட் சிறுமியர்தம் மையல்நோய் நீங்கிப்
பழுதில்லா மாதவத்தின் பயன்பெறுவா ரன்றே 12

## 6. கம்பத் திளையனூர் பதிகம்

### காப்பு - வெண்பா

காரார் திருவருணைக் கம்பத்தில் வாழ்குகனே
ஆரார்உன் கீர்த்தி அறிகுவார் – போராடும்
சூர னுயிர்தடிந்தாய் துங்கவே லேந்திநின்றாய்
தீரகுணத் தோடுதவி செய்

## நூல் - அறுசீர்க்கழில் நெடில் விருத்தம்

சீரார்வண் தமிழ்பாடும் அருணகிரி
தான்,என நீ செப்பக் கேட்டும்
ஊரார்சொல் நிந்தையிறைற் பரதவிப்ப(து)
அறியாயோ, உன்சொல் பொய்யோ?
கூராருந் தனிவேலும் கொற்றமயில்
வாகனமும் கொள்ளும் கோவே
ஏராரும் திருவருணைக் கம்பத்தில்
இளையோனும் எம்பி ரானே 1

கல்லோடும் நிகரோதக் கூடாத
நெஞ்சுடைய கடைய னேனை
நல்லோரிற் சீரியனென் றொருதரம்போல்
நூறுதரம் நவின்றோன் ஆரோ?
பொல்லோர்தம் குடர்பறிக்கும் வடிவேலும்
குக்குடமும் புனையும் தோளா
எல்லோரும் புகழருணைக் கம்பத்தில்
இளையோனும் எம் பிரானே

என்னருமை நீயறிவாய், உன்னருமை
நானறியேன்' எனினும் முன்னாள்
சொன்னசொல்லை மறந்தேனோ, நினைந்திருந்தே
இந்தமட்டும் துணிந்து வந்தேன்
புன்னகையாற் புரமெரித்தோற்(கு) உபதேச
மொழிபகர்ந்த புனிதா நல்லோர்
இன்னலொழித் தருள் அருணைக் கம்பத்தில்
இளையோனும் எம்பி ரானே

ஒருதரம்நீ மொழிந்ததுவும் மெய்யெனும்நான்,
ஆயிரம்போ துரைத்த சொல்லைக்
கருதரிய பொய்யென்னத் துணிவேனோ
அநுபவத்திற் காணேன் அந்தோ
பொருவில்பிர புடராசன் கண்கெடுத்துக்
கொடுத்தாண்ட புகழுள் ளானே
எருதிவர்வார் வாழருணைக் கம்பத்தில்
இளையோனும் எம்பி ரானே 4

பாகைநிகர் செந்தமிழ்ப்பாப் பாடும்நலம்
கொடுத்ததினும், பலவா(று) ஓதி
ஓகையுறச் செய்ததினும், உலகத்தார்க்கு
ஒப்புவிப்ப துயர்ச்சி யாமோ

வாகைமலி வச்சிரமும்சூலமும் வேற்
    படையும்வைத்த மலர்க்கை யானே
ஈகையுளார் மிகும்அருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானே 5

அந்நாளில் அருணகிரி நாதனைக்காத்
    தருளல்உண்மை யாகு மானால்
இந்நாளில் என்மனம்போல் விளையாடும்
    கடமையுனக் கில்லை கொல்லோ
வெந்நாக மிசையேறும் வெற்றிமயிற்
    பரியூர்ந்து விளங்கும் வேளே
எந்நாளும் திருவருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானே 6

அகள நிரஞ் சனமயமென்(று) உரைப்பார்முன்
    சிறிதேனும் அஞ்சி டாமல்
சகளவுல்லா சக்குமர குருபரன்என்(று)
    ஓதுமென்சொல் தவரு(து) ஆள்வாய்
திகழ்கலபச் சிகியேறித் தகரூர்ந்து
    களிறு(உ)கைக்கும் செம்பொற் குன்றே
இகபரத்தும் உயரருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானே. 7

கழுத்திரத்தம் சொரியவெனத் துணிந்திரவில்
    வருமொருவன் களிக்கு மாறு
கொழுத்தமின்னற் சுடரேபோற் குலவியநின்
    திருவருளும் குன்றிப் போமோ
முழுப்புலமைக் கவுணியனுச் சீகாழிப்
    பதியில்வரும் முருக வேளே
இழுக்கொழிக்கும் எழிலருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானே 8

வாரணமும் சீயமுந்தன் துணையாகக்
    கடலில்வரும் மாவைக் கீறும்
வீரவடி வேற்பூசைக்(கு) ஆசைகொள்ளும்
    எனதுதவம் வீணாய்ப் போமோ
கீரனுக்கன் றருள்செய்தாய், கிளிபாடும்
    தமிழ்ப்பாடல் கேட்டாய், என்றும்
ஈரமுளார் வரும்அருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானே 9

நாவலந்தீ வறியமுன்பு விளையாடி
    அண்டமெங்கும் நாடிப் போய்வந்(து)

ஆவலெல்லாம் முடித்துனது பதமலரிற்
    கலக்குநலம் அளிப்பாய் கொல்லோ
மூவர்தொழும் முருகோனே! முதல்வீரற்
    கௌஏனை முனிவற் கன்றோர்
ஏவளித்தாய்! மூதருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானே 10

தண்ணிலா எனமிளிரத் தவளநிறப்
    பொடிபூசித் தண்டம் ஏந்தி
உண்ணிலா(வு) அருள்நாடித் தவம்புரியும்
    கவுமாரர்க்(கு) உறவா வேளே
புண்ணிலா நெறியளிக்கும் குருநாதா
    மெய்ஞானப் பொருளை வேண்டி
எண்ணிலார் தொழும்அருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானே 11

இல்லையென்னார் வாழருணைக் கம்பத்தில்
    இளையோனும் எம்பி ரானை
நெல்லைநகர்ப் பாவலவன் நிகழ்த்தியபாப்
    பதினொன்றும் நிதமும் கூறில்
தொல்லைவினைத் தளைநீங்கி, அணிமாதி
    சித்தியெட்டும் தோய்ந்து, பின்பு
புல்லையுரித் தணிந்தாடும் பெருமான்போல்
    வானகத்திற் பொலிவார் அன்றே. 12

— —

## 7. கோபுரம் கம்பம் பொதுப் பதிகம்

### காப்பு - வெண்பா

கோபுரத்தில், தூணில், குடிகொண்டு தென்னருணை
மாபுரத்தில் வாழும் வடிவேலா - நீபுரப்ப(து)
உண்மையென்றால் என்னை உலகமெலாம் போற்றி செயும்
வண்மையுறச் செய்துமகிழ் வாய்.

### நூல் - எண் சீராசிரியம்

தென்பொதியைக் கடுத்ததிரு மலைமீ தேறிச்
    சிறியனேன் உருண்டஅன்று செத்துப் போகா(து)
அன்பொடுகாத் ததுநிசமே யாகுமானால்
    அயிலேந்தி மயில்மேல்வந் தருட்பே றீந்தாள்

என்பொடுவெண் டலைமாலை அணிவார் மைந்தா
இகபரசா தனங்கொடுக்கும் இயல்புள் ளானே
கொன்பொலியும் பொழிலோங்கும் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணிலும்வாழ் குமர வேளே 1

அக்குமணி வடம்பூண்டு நீறு பூசி
ஆறெழுத்தும் கூறியன்பர்க் கடிமை யாகி
முக்குணமும் கடந்தபர மோன னந்த
முடிப்பறிய வேண்டிமிக முயன்றேன் கண்டாய்
இக்குவில்லோன் மனம்நாணும் அழகுள் ளானே
எனை அருண கிரிதானென் றிசைத்த வாயாய்
குக்குடப்புள் ஓசைமிகும் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே 2

நிலைதவரு மனமில்லேன் தவம்சற் றில்லேன்
நெறியில்லேன் பொறையில்லேன் நின்தாள் போற்றும்
கலையுணரேன் ஆனாலும் கைவி டாமற்
கருணைபுரிந் தாள்வதுன்றன் கடனு மன்றோ
சிலைமதனன் கணைக்கிளைத்தார் போலக் கானிற்
சென்றுகுறச் சிறுமிதனைச் சேவித் தோனே
கொலைபுரியார் மருவுதிரு வருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே 3

நெஞ்சறிய நீயுரைத்த மொழியை நாடி
நெட்டுயிர்க்கும் தமியேனை நிலைத்தோ ரெல்லாம்
வஞ்சகனென் றுரையாத வண்ணம் தோன்றி
மகிழ்ச்சியுறச் செய்துனது மலர்த்தாள் ஈந்தாள்
பஞ்சவன்னச் சிகியேறும் பவளக் குன்றே
பார்ப்பதியாள் இளமுலைத்தீம் பாலுண் டோனே
குஞ்சரம்கொன் றுரித்தபிரான் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே. 4

நன்றுடையார் தம்மோடும் பழகி டாமல்
ஞானமுழு துணர்ந்தார்போல் நகைத்துப் பேசி
மென்றுவிழுங் கிடலாதி விடயம் நாடி
மெலிவேனை யிகழாமல் விரும்பு வாயோ
வன்றுதிக்கைத் தாருகன்முன் விடுத்த வாளி
வலக்கையாற் பிடிபடுஞ்சீர் மன்னு வானே
குன்றுருவ மாய்அரன்வாழ் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே. 5

நம்பறியாக் கள்ளநெஞ்சம் உடைய பாவி
நான்ஒருவன் பிறந்தபின்பு ஞாலமெல்லாம்

வெம்பலுறச் செய்யுமிடி யெல்லாம் நீங்கி
மேனாள்போல் வாழும்நலம் விழைந்தேன் அன்றோ
செம்பவளக் குன்றனைய முருகா பைம்பொற்
சிகியேறிப் பவனிவரும் சிறப்புள் ளானே
கும்பமுனி பரவியசீர் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே. 6

வாளில்லா வீரன்போல், விடமொன் றில்லா
மாசுணம்போல், பரதவித்து மறுகும் என்னை
காளில்லா வெண்மனத்தாற் றவமே செய்து
கருதியவா விளையாடிக் களிக்கச் செய்வாய்
தாளில்லாப் பணியணைமேற் றுயில்வான் மெச்சும்
தனிவேலா மகம்ஈன்ற தகருள் ளானே
கோளில்லா மாதவர்வாழ் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே. 7

காழிசைந்த வேங்கைமர வடிவு மாகிக்
கடத்திற்போய் ஒருகுறத்தி கண்முன் நின்றாய்க்(கு)
ஏழிசைத்தீந் தமிழ்ப்புலமைத் தொழும்பர் தம்பால்
எழிற்றேகை மிசைதோன்றில் இளப்பம் கொல்லோ
காழிநகர்ச் சேயாகி ஒருக்கால் வந்த
காரணனே ஆரணமும் கடந்த மூர்த்தீ
கோழிநெடுங் கொடியோங்கும் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே. 8

விண்டலத்தார்க் கிடுக்கண்மிகச் செய்யும் சூரன்
விறலழியப் பொருதுமுன்னாள் வென்றா யென்று
மண்டலத்து நூல்பலவும் சொல்லக் கேட்டுன்
மலரடிக்கீழ் வந்தடைந்தேன் வருந்தச் செய்யேல்
கொண்டலைக்கண் டானந்த நடனம் ஆடிக்
கூவுமயிற் பரிமீது குலவும் கோவே
குண்டலக்கா துடையானே! அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே 9

நாகபட மனையசடை மடவார் மைக்கண்
நமனேபோல் வெருட்டநொந்து நலியா வண்ணம்
பாகரசத் தமிழ்பாடும் பெருவாக் கீந்து
பழவடியா ருடன்கூட்டிப் பாது காப்பாய்
மாகமுளார் தொழுமூவர் பரவும் பாதா
வாரணப்புட் கொடியேந்தும் வண்மை யானே
கோகனகத் தடஞ்சூழும் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே 10

மருவெல்லாங் குடியிருக்கும் கடப்ப மாலை
வனைந்தமுடி ஓராறும் வனசந் தாங்கும்
திருவெல்லாம் குலவும்அடற் புயம்ஈ ராறும்
செழுமலர்த்தாள் இரண்டும்என்று தெரிசிப் பேனோ
கருவெல்லாந் தவிர்த்தாளும் முருகா விண்ணோர்க்
களிறூர்ந்து குஞ்சரியைக் கைக்கொண் டோனே
குருவெல்லாம் ஆவானே அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளே. 11

குல்லைமலர் வனம்பெருகும் அருணைக் கோயிற்
கோபுரத்தும் தூணினும்வாழ் குமர வேளை
நெல்லைநகர் வருமுருக தரச னென்று
நிலவுதிருப் புகழ்க்காரன் நிகழ்த்தும் பாடல்
வல்லைவென்ற முலையார்தம் விழிவேற்(கு) அஞ்சா
மனத்தால்மெய்த் தவம்புரியும் வாழ்வை நல்கித்
தொல்லைவினைக் கட்டறுத்துப் பிறவா வீட்டில்
சுகங்கொடுக்கும் ஆதலினாற் றுதித்துய் வீரே 12

---

## 8. வேலணிய வேண்டு பதிகம்

### *காப்பு - வெண்பா*

நாற்பயனும் நல்கருணை நற்சிகரி வாழ்குமரன்
வேற்படையைச் சற்று வெறுத்தானென்(று)-ஏற்படல்கண்(டு
ஓதும் பதிகத்துக்(கு) உள்ளன்பை யன்றிமற்றிங்(கு)
யாதுந் துணையறியே னே.

### *நூல் - கொச்சகக்கலிப்பாக்கள்*

சொல்வளர்தண் டமிழ்ப்புலவர் சோகமுறப் புரிவாரை
வெல்வலிமை யின்மையினால் வேற்படையை வெறுத்தாயோ
கொல்வதில்லார் வாழருணைக் கோபுரத்துக் குகவேளே
எல்வடிவு காட்டுமதை எமக்கிரங்கி யணிவாயே. 1

புகழ்வேண்டித் தவம்புரியும் புண்ணியரைத் தினம்நிந்தை
பகர்வாருக் கஞ்சிவைவேற் படையதனை வெறுத்தாயோ
திகழ்சீலத் திருவருணைச் சிகரியுறை செவ்வேளே
இகலோர்வே ரறுக்கும்அதை எமக்கிரங்கி அணிவாயே. 2

புண்ணியத்தில் விருப்பின்றிப் புலையாதி புரிவோராம்
திண்ணியநெஞ் சினர்ஏசத் திகழ்வேலை வெறுத்தாயோ
வண்ணிலவு தென்னருணை வான்சிகரி வாழ்முருகா
எண்ணில்பலர் போற்றுமதை எமக்கிரங்கி அணிவாயே. 3

தமையன்றிச் சீரியவர் தரணியில்இன் றென்றுபுலைச்
சமையங்கொள் வார்க்கொதுங்கித் தலைவேலை வெறுத்தாயோ
உமைகேள்வன் வாழருணை யூர்ச்சிகரிக் குமரேசா
இமையாரும் வாழ்த்துமதை எமக்கிரங்கி யணிவாயே. 4

தந்திரத்தால் மானிடர்தம் தனம்பறித்துச் சாற்றரிய
மந்திரம்பொய் யென்பாரால் வடிவேலை வெறுத்தாயோ
செந்திருவாழ் மூதருணைச் சிகரியுறை செவ்வேளே
இந்திரரூர் காக்குமதை எமக்கிரங்கி யணிவாயே. 5

விள்ளரிய நான்மறையும் வீணென்று வேறுநெறி
கொள்ளவர்கள் வாய்நகைக்கக் கூர்வேலை வெறுத்தாயோ
கள்ளமிலார் வாழருணைக் கனசிகரிக் காங்கேயா
எள்ளலெல்லாம் தீர்க்குமதை எமக்கிரங்கி யணிவாயே. 6

வானவரும் மாதவரும் மறையோரும் வாடிநிற்கத்
தானவரா தியர்மகிழத் தனிவேலை வெறுத்தாயோ
மோனமுள்ளார் சூழருணை முதுசிகரி முருகோனே
ஈனர்களைச் சாடுமதை எமக்கிரங்கி யணிவாயே. 7

பொழிபாடற் கவுணியனைப் புவியில்வந்த புகழுரைப்பார்
கழிவாடித் தவிக்கவென்று கதிர்வேலை வெறுத்தாயோ
பழிநீக்கும் தென்னருணைப் பழஞ்சிகரிக் குருபரனே
எழிலோங்கித் திகழுமதை எமக்கிரங்கி யணிவாயே 8

சூரன்முதல் தானவரைத் தொடர்ந்தடர அன்றுவந்த
வீரமிந்நாள் இல்லையென்று விதிர்வேலை வெறுத்தாயோ
சீரருணைக் கோபுரத்துச் செவ்வேளே நின்றிருத்தாள்
ஈரமுளார் நாடுமதை எமக்கிரங்கி யணிவாயே 9

அயனாதி மூவரும்நின் அடிமையெனும் அதுபொய்யாய்
மயலோனென் றுலகிகழ வைவேலை வெறுத்தாயோ
புயலாரும் பொழிலருணைப் பொற்சிகரிக் குகனேநின்
இயல்போங்கச் செயுமதனை எமக்கிரங்கி யணிவாயே. 10

குருபரனென் றுணராமற் குழவியெனும் கொடியோர்தாம்
வெருள்வதின்றி மகிழ்வதென்ணி வேலதனை வெறுத்தாயோ
அருணைநகர்க் கோபுரத்தோர் ஆனையுடன் அமரெந்தாய்
இருவகைப்போர்க் கிசையுமதை எமக்கிரங்கி யணிவாயே. 11

ஆர்வேய்ந்த சென்னியினார் அருணைநெடுங் கோபுரத்திற்
கூர்வேலை வெறுத்தான்போற் குலவுகுகன் அதுதாங்கிக்
கார்வேலை யுடுத்தபுவி களிக்கும்நலம் செயவேண்டிச்
சீர்வேணு வனத்தொருவன் செப்புதமிழ் செயந்தருமே. 12

———

## 9. வேலணிந்து கொண்ட பதிகம்

### காப்பு - வெண்பா

கோலத் திருவருணைக் கோபுரத்தில் வாழ்குமரன்
வேலணிந்து கொண்ட விதங்கூற—நீலநிறத்(து)
அம்பிகைப்பெண் அந்நாளில் ஆனையுரு வாய்ப்பயந்த
தும்பிமுகத் தெய்வம் துணை.

### நூல்-வெண்டளைக்கலிப்பா

திங்க ளணிவார் திருவருணைக் கோபுரத்தில்
எங்கள் குருவாய் இலங்கும் குகப்பெருமான்
அங்கணில மாதர் அகங்குளிரச் செய்வதெண்ணி
வெங்கணரைக் கொன்றுழக்கும் வேலணிந்து கொண்டானே. 1

அல்லற் பிணிதீர்த் தருளருணைக் கோபுரத்தில்
செல்லக் குழந்தைத் திருவுருவோ டுற்றகுகன்
மல்லற் புவிவாழ்வான் வல்லரக்க ராதியரை
வெல்லத் துணிந்துவடி வேலணிந்து கொண்டானே. 2

தெற்றி மலர்பூத்த சீரருணைக் கோபுரத்தில்
உற்றிருந்து நாடுமவர் உள்வதெல்லாம் நல்குசெவ்வேள்
புற்றிடத்துப் பாம்பனைய புன்சமய வேரறுத்து
வெற்றி பெறவேண்டி வேலணிந்து கொண்டானே. 3

நஞ்சைவென்ற நாதர்வளர் நல்லருணைக் கோபுரத்தில்
மஞ்சைநிகர் தோகை மயில்மீது வாழ்குமரன்
அஞ்சை யடக்கும் அருந்தவர்க்கோர் ஆதரமாம்
விஞ்சை வடிவான வேலணிந்து கொண்டானே. 4

தொண்டு புரியும்நல்லோர் சூழருணைக் கோபுரத்தில்
கண்டுதொழ வல்லார் கலியொழிக்கும் கைக்குகவேள்
வண்டுமலி கட்கடப்ப மாலைகமழ் மார்பிடத்தில்
விண்டுமுத லோர்புகழ வேலணிந்து கொண்டானே. 5

சீரனந்தம் ஓங்கத் திகழருணைக் கோபுரத்தின்
ஓர மதில்வடபால் உற்றபுகழ் பெற்றபிரான்
காரவுண ராதிக் கயவர்குல வேர்களைய
வீர நெடுந்தோளில் வேலணிந்து கொண்டானே. 6

கன்னற் பொழில்சூழ் கவினருணைக் கோபுரத்தில்
வன்னச் சிகிமேல் வடவருகில் வாழ்பெருமான்
இன்னற் படும்உலகோர் எல்லோரும் வாழஎன்று
மின்னற் கொடிநாணும் வேலணிந்து கொண்டானே. 7

விண்பிளந்து நீடுமலை மேவருணைக் கோபுரத்தில்
கண்பெருகு தோகைமயிற் காவலனு வாழ்முருகோன்
சண்பைநகர் பாவலனுற் றூரணியில் வாழ்வுபெற்ற
வெண்பொடிச்சீர் குன்றுமல் வேலணிந்து கொண்டானே. 8

தேவா தியர்பரவும் தென்னருணைக் கோபுரத்திற்
கோவாகி நிற்கும் குமர குருநாதன்
மாவாய சூரனென வானவரைச் சீரழிக்கும்
மேவார் குடரழிக்கும் வேலணிந்து கொண்டானே. 9

முத்தேவர் போற்றிசைக்கும் மூதருணைக் கோபுரத்தில்
சித்தேறச் செய்து திருப்புகழ்ப்பா மாலைகொள்வோன்
புத்தேளிர் சேனைப் புரவலனே பூதலத்து
மெய்த்தே வெனவிளங்க வேலணிந்து கொண்டானே. 10

தீதகன்ற மெய்ப்புலவர் சேரருணைக் கோபுரத்திற்
கூதளப்பூச் சூடும் குருவாம் குமரேசன்
போதன் உரையாய்ப் புலைச்சமயத் தோர்புரியும்
வேதனையெல் லாம்தவிர்க்க வேலணிந்து கொண்டானே. 11

குன்று வளத்தருணைக் கோபுரத்தின் வாயில்அரு(கு)
ஒன்றுண்மைக் காரன் உலகில்உள்ள ஊறொழிக்க
மின்றுழும் வேலணிந்தான் வேணுவனத் தான்துதித்தான்
என்றூர்க்கும் பொல்லார் இகலொழிக்கும் ஏற்றமுண்டே. 12

## 10. வழக்குப் பதிகம்

### காப்பு - வெண்பா

வள்ளல் அருணைநகர் வல்லாளன் கோபுரத்தில்
கள்ளனென ஒன்றிநின்ற கந்தன்பால்—உள்ளவழக்(கு)
ஓதி யிரக்கும் உணர்வுதடு மாறுமல்
ஆதி விநாயகன்காப் பாம்.

### நூல் - எண்சீராசிரிய விருத்தம்

எத்தனையோ தரம்அருண கிரியென் றென்னை
இயம்பியநீ அறியார்போல் இருக்கக் கண்டு
பித்தன்மக ஆகையினுல் உனக்கும் பித்துப்
பிடித்ததுவோ என்றுமனம் பெரிதும் நொந்தேன்
இத்தருணத் தொருசிறிதும் இரங்கா யாகில்
இனியெந்தக் காலத்தில் இரங்கு வாயோ
முத்தமிழ்த்தென் அருணைநகர்ச் சிகரி வாயில்
முகப்பின்வட புறத்தில்நிற்கும் முருக வேளே 1

ஐயையோ உலகத்தூ(டு) உழலா வண்ணம்
அப்படிவந் தொருகனவில் ஆண்ட நீதான்
மெய்யைஏன் வெளிப்படுத்தா திருக்க வேண்டும்?
விளையாட்டுக் கேனும்பொய் விளம்ப லாமோ
கையையன்று காட்டியது மறந்திட் டாயோ
கதிர்வேலைப் பிடித்துநின்றும் கலங்க லாமோ
மொய்யைவென்ற நீலவிழிக் குறத்தி பாகா
மூதருணைக் கோபுரத்து முருக வேளே. 2

நின்கோயிற் றிருப்பணியும் உன்னை நாடும்
நிலையுடையார் தவநெறியும் நிறையச் செய்து
தன்கோயில் ஒன்றறியான் விதியைத் தாண்டும்
தனிப்புகழென் றனக்கீயத் தக்கா யன்றோ
பொன்கோயிற் றடமலியும் அருணை மூதூர்ப்
புண்ணியக்கோ புரத்தின்வட புறத்தில் உள்ள
முன்கோயிற்(கு) அரசாகிப் புலவர் பாடும்
முத்தமிழ்ப்பா மாலைகொள்ளும் முருக வேளே 3

தெள்ளியசெந் தமிழ்க்குருகும் உணர்வுன் றன்பாற்
சிறிதேனும் உள்ளதென்றாற் றெய்வ யானை
வள்ளிமுதற் பலர்அறியத் தமியேன் வேண்டும்
வரமனைத்தும் கொடுத்தருளி மகிழச் செய்வாய்
புள்ளிமயிற் பரியூர்வாய் வடிவேல் ஏந்தும்
புண்ணியனே என்றுதினம் புலம்பி நொந்தேன்
முள்ளில்வேய் அனையார்பால் இரவார் கூட்டம்
முழங்கருணைச் சிகரியில்வாழ் முருக வேளே. 4

புகழ்ந்தாலும் இரங்குகில்லாய், இகழ்ந்திட் டாலும்
பொறுக்கின்றாய், என்னசெய்வேன் புண்ணா நொந்த
அகந்தாங்கக் கூடாத துயர முற்றேன்
அநியாயம் செய்யாதே அருட்பே றீந்தாள்
நகர்தோறும் நடமாடும் திருத்தா ளானே
நான்முகத்தோன் படைத்தபுவி நங்கைக் குள்ள
முகம்போலும் திருவருணைச் சிகரி வாயில்
முகப்பில்அடை யாளம்வைத்த முருக வேளே. 5

என்னுணை நின்னருண கிரிமேலானை
இரங்கிரங்கு வஞ்சகர்போல் இருக்க வேண்டாம்
பொன்னாசைப் பெரும்பேய்வந் து(உ)றுக்க நொந்து
புண்பட்ட(து) இந்தமட்டும் போதும் போதும்
பன்னாளும் தமிழ்கேட்டும் செவியில் லார்போல்
பார்த்திருக்க லாகுமோநீ பரிசீந் தாள்வாய்
முன்னுன புகழருணைச் சிகரி காத்து
முதல்வனென விளையாடு முருக வேளே 6

இப்படியெல் லாம்தமியேன் வருந்நக் கண்டும்
இரங்காத கொடுமையைத்தான் எங்கே கற்ருய்
செப்பரிய மதுரமுறும் தமிழ்ப்பாட் டுன்றன்
செவிகளுக்குக் கசப்பாமோ? செந்நீர் தோய்ந்து
துப்பனேத்தாம் அரிசியிடும் வழிபா டோதித்
துதித்தாற்கும் இரங்கல்உண்டேல் தோடம் கண்டாய்
முப்பழச்சா றெழுகுதிரு அருணைக் கோயில்
முதுசிகரிக் காவல்கொள்ளும் முருக வேளே. 7

கானமறக் கொடியானே, மகவான் தந்த
கன்னிகைதன் ஆனே, நின்கைக் கதிர்வே லானே
போனபிறப் பினில்அருண கிரியாய் நாயேன்
பூதலத்தில் வாழ்ந்தவிதம் புகன்றிட் டோன்ருன்
நானலவென் ருலும் சொல்லு சொல்லு
நவின்றதுண்டேற் சீகாழி நகர்க்கோன் போலும்
மோனபரா னந்தமுறப் புரிந்(து)ஆள்! அன்பு
முதிரருணேச் சிகரியுற்ற முருக வேளே 8

பொதுநீதி யறிந்தகவு மார ரெல்லாம்
புனேந்ததிரு வடிவேண்டிப் புலரு மென்னே
இதுகாறும் படுத்தியபா டளவில் உண்டோ
இன்னமும்நீ இரங்காமல் இருக்க லாமோ
மதுவாரி யமுதெனும்செந் தமிழ்மே லானே
மயில்மேல்வந் தென்கவலே மாற்றி ஆள்வாய்
முதுசூரன் நடுநடுங்கப் பொருத வேலா
முதலருணேப் பதிச்சிகரி முருக வேளே 9

பாவலவர்க் கரசான நீயும் என்சொற்
பனுவலேக்கொண் டநுக்கிரகம் பண்ணு விட்டால்
தேவரதூர் புரந்ததுவே முதலா யுள்ள
சிறப்பெல்லாம் குறையுமென்றும் சிந்தை நொந்தேன்
ஆவலறிந்(து) உதவவலி இல்லா யானுல்
அடியேனேன் றன்னேஇங்கேன் அழைத்தாய் அந்தோ
மூவர்புகழ் அருணேநெடுங் கோபு ரத்தின்
முகப்பிலன்பர்க் குவப்பளிக்கும் முருக வேளே. 10

கறைதீராப் புன்சமயத் துள்ள பேர்க்கும்
கருத்தறிந்து குருவா கக்காட்சி நல்கும்
இறையோனும் உனேப்பணிந்தும் துதித்தும் நாயேன்
இளேத்தவிதம் அறியாயோ இனியா னுலும்
பிறைசூடும் பெருமானே(டு) உரைத்த சொல்லேப்
பேசியுன தடியாருட் பிறங்கச் செய்வாய்

முறைமாருப் பெரியோர்சூழ் அருணைக் கோயில்
முதுசிகரி வடவருகின் முருக வேளே. 1[1]

முத்தர்வரும் அருணை நகர்ச் சிகரிக் கோயில்
முருகவேட்(கு) அருளாண்மை உதிக்க வேண்டிப்
பத்தர்மிகும் நெல்வேலிப் புலவன் பாடும்
பதிகம்நல மெனநாளும் படிக்க வல்லார்
புத்தமுத மணையதமிழ்க் கடலை நீந்திப்
புண்ணியருக் கானந்தம் பொருந்தச் செய்து
சித்தர்குழாம் பரவுபெரும் புகழோ ராகித்
திரும்பாத பரகதியின் சீர்கொள் வாரே. 11

## 11. நித்திரை நீங்கு பதிகம்

### *காப்பு - வெண்பா*

*சித்திரப் பாவை திகழருணைக் கோபுரத்தான்*
*நித்திரை நீங்கி நினைவுபெறப் - பத்தியினற்*
*பாடும் பதிகம் பலிப்பதற்குக் கையில்ஒரு*
*சோடுகொண்டோன் காத்துமுன்னிற் கும்*

### *அறுசீர்*

சிட்டிசெய் தனுப்பு வாற்கும் செழுங்கரும் பணிந்த வேட்கும்
முட்டிடும் மயிடத் தாற்கும் முனைமிகப் பெருக லாமோ
கொட்டிலங் குறிச்சிக் கோயிற் கோபுரத் தருணை மேவும்
நெட்டிலை வேற்பெம் மானே நித்திரை நீங்குவாயே. 1

ஓதிடாக் கயவர் தம்பால் உணர்வுடன் ஒழுக்கம் பேசி
வாதிடுங் கொடுமை நீங்கி மகிழ்வுறக் கருதி வந்தேன்
சோதிவெற் பருணை மூதூர்த் தொழும்நெடும் சிகரி காக்கும்
நீதிசேர் குமர வேளே நித்திரை நீங்கு வாயே. 2

கமலைதன் கணவன் போலக் காசினி தன்னில் வாழ்ந்து
விமலவீ டடைவா ரோடு மேவிடற் குறித்தேன் அந்தோ
சமரசம் பெருகும் சோண சயிலம்நேர் சிகரி யானே
நிமலசிற் பரனும் கந்தா நித்திரை நீங்கு வாயே. 3

மாற்றுரைத் திடஒண் ணாத மாழையங் குவடு போலத்
தோற்றுபூண் முலையார்க் கஞ்சித் தொடர்ந்துனை வணங்கல் பொய்யோ
காற்றுலாம் அருணைக் கோயிற் கனககோ புரம்வாழ் கந்தா
நேற்றுநீ நடந்த வாறு நித்திரை நீங்கு வாயே. 4

ஆறுவாழ் சடையா ராளும் அருணையூர்ச் சிகரி மீதில்
ஏறுமோர் சிகிமேல் நிற்கும் எழிலுடைக் குமர வேளே
நூறுபோ துண்மை வார்த்தை நுவன்றது மன்றிக் கையில்
நீறுமுன் கொடுத்த துண்டேல் நித்திரை நீங்கு வாயே. 5

நீயமர் நருமிக் கோயில் நிறைபெருந் திருவார் விண்ணோர்
மேயவர் நாணக் கண்டு விருப்பெலா முடிக்க வந்தேன்
தூயதென் அருணைக் கோயிற் றெல்பெருஞ் சிகரி யாளும்
நேயனும் முருக வேளே நித்திரை நீங்கு வாயே. 6

கருப்பைபயிற் புகுந்து தோன்றிக் கலங்குரு தளிக்கும் தொல்சீர்த்
திருப்புகழ்ப் பனுவல் பாடும் திறலுடன் திகைக்க லாமோ
பருப்பதத் தருணைக் கோயிற் பழையகோ புரத்து வேலா
நெருப்பினும் சிவந்துள் ளானே நித்திரை நீங்கு வாயே. 7

இத்ததி அறியாய் நீயென்(று) இயம்புதற் கிசையா நாயேன்
பித்தரிற் கடையர் போலப் பெரிதுளம் மறுக லாமோ
முத்தமிழ் விரகா வேழம் முழங்கெழில் அருணை ஆளும்
நித்தர்தம் சிகரி வேலா நித்திரை நீங்கு வாயே. 8

சூரனைப் பிளந்த வைவேல் சூலம்வெண் குலிசம் ஏந்திச்
சீரரு அருணைக் கோயிற் சிகரியிற் றிகழும் செல்வா
பாரதி வருந்தப் பல்லோர் படியிடத்(து) இகழா திந்த
நேரம்நீ யிரங்கிச் சற்றே நித்திரை நீங்கு வாயே. 9

தாமரை மலர்ப்புத் தேளும் சலதியிற் றுயிலு மாலும்
காமனை முனிந்து ளானும் கருதுசீர் விரும்பி வந்தேன்
தாமதர் புகழாச் சோண சயிலவான் சிகரி காக்கும்
நேமமிக் குளகாங் கேயா நித்திரை நீங்கு வாயே. 10

கோபதோய் தவிர்ந்தோர்க் கெல்லாம் குருவெனக் குலவும் உன்னைத்
தீபமென் றெண்ணி உள்ள திருட்டிருட் டொழிக்க வந்தேன்
பாபமில் அருணைக் கோயிற் பழையகோ புரத்தின் பால்வாழ்
நீபமா லிகைச்செவ் வேளே நித்திரை நீங்கு வாயே. 11

அடியவர்க் கினிய தான அருணையூர்ச் சிகரி மீது
நெடியவேல் புனைந்து நின்றோன் நித்திரை நீங்க வேண்டிப்
படிபுகழ் திருநெல் வேலிப் பாவலன் படித்த பாடல்
கொடியவர்க் கெமனும் நல்லோர் குலத்தினுக் குயிராம் அன்றே 12

---

முருகக் கடவுள் துணை

## 12. காராளர்வீதி முருகக் கடவுள் பதிகம்

### காப்பு - வெண்பா

தேராரும் வீதித் திருவருணை மாநகரிக்
காராளர் போற்றிசைக்கும் கந்தனுக்குச் – சீரார்
பதிகமொன்று பாடுதற்குப் பன்னிருகை வேலும்
அதிகவிதத் தோகையுங்காப் பாம்.

### நூல் - எண்சீர் ஆசிரியவிருத்தம்

திருமருவும் வெண்கமலப் பொகுட்டில் வாழும்
சேயிழைதன் அருள்நோக்கும் சேரச் செய்து
பொருவாமெய்ப் புகழ்கொடுக்க வல்லா யென்றுன்
பொன்னடியே கருதுகின்றேன் புறம்பிற் றள்ளேல்
குருவாகித், தனையொருக்கால் ஈன்றுள் ளாற்கும்
குறுமுனிக்கும் திருவருட்சீர் கொடுத்த வேளே
கருவாதை தவிர்க்குமெழில் அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 1

வாருறுமென் முலையார்க்கும் பொருளைப் போற்றி
மாதவத்தோர் தமையிகழும் மடமை யோர்க்கும்
ஆருயிர்கொன்(று) ஊனருந்திக் களிக்கின் றோர்க்கும்
அஞ்சாதுன் திருவடிக்கா ளாவ தென்றோ
நீருறையும் சடைமுடியார்க் கினிய மைந்தா
நெடுவயிரம் குலிசம்வைவேல் நிலவுந் தோளா
தாருலவும் பொழில்சூழும் அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 2

பஞ்சனைய மெல்லடிசேர் குறப்பெண் ணாளும்
பைம்பொன்னூர்ப் பிடியும்இரு பாலு மேவிக்
கொஞ்சமயிற் பரியூர்ந்து வடிவேல் கொண்டு
குலவியெனைப் புரந்தருளக் குறிப்பாய் கொல்லோ
செஞ்சதங்கைத் தாளுடைய குமர வேளே
சேவலம்புட் கொடிதழைக்கும் திருக்கை யானே
கஞ்சமலர் வாவிசுற்றும் அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 3

ஏழ்வேலை யெனப்பெருகும் இச்சை யுள்ளேன்
எவ்வண்உய்வேன்? நீதானே இரங்கி உண்மை
வாழ்வேமிக் குதவிஉன்றன் அடியா ரோடு
மகிழ்கூரப் புரிந்துபத மலரிற் சேர்ப்பாய்

தாழ்வேதும் அணுகரிய பெருமை யானே
சரவணத்திற் சிவன்புரியுந் தவத்தால் வந்தாய்
காழ்வேங்கைப் பொழில்மலியும் அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 4

பொற்பமைந்த மெல்லிநல்லார் கலவி யின்பம்
புகன்றாலும் களிகூரும் பொல்லா நெஞ்சத்(து)
அற்பன்யான் ஆறெழுத்தால் உண்மை ஞானம்
அடைந்தார்தம் பெரும்புகழ்க்கும் ஆசை யானேன்
மற்படுதிண் தோளொருநான் குடைய வேளே
வாரணத்திற் கனகநகர் வலம்வந் தோனே
கற்பகத்தோன் பரவுதிரு அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 5

பாவியெனப் பல்லோரும் இகழா !துன்பொற்
பதம்புனையும் அவரோடும் பகர வேண்டி
ஆவியினைத்(து) அகம்குழைவுற்(று) உடலும் சோர்ந்தேன்
அறியாயோ, இனிச்சகியேன், அந்தோ அந்தோ
தாவிலிசை நாரதன்றன் மகத்திற் றோன்றும்
தகர்உகைக்கும் குகவேளே! தனிவேற் கந்தா
காவிமலர் வயல்வளஞ்சேர் அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 6

களிறுபொரும் விரலார்கைக் கழங்கோ(டு) ஆடும்
கெண்டைவிழி கண்டுருகும் கீழோர் தம்பால்
வெளிறுபடு முழுநீற்றோ(டு) ஏகி ஏற்று
மெலியாதார் திருக்கூட்டம் விளங்கல் என்றோ
பிளிறுமொலி காட்டி,மதம் கவிழ்த்துக், கையாற்
பீதகப்பூண் குப்பைதள்ளிப் பிறைக்கோ டேந்திக்
களிறுலவும் நெடுவீதி அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே, 7

மேழிநெடுங் கொடிஅமைச்சும் வளவன் ஈன்ற
மெல்லியலும் களிகூர 'வெண்ணீ றோங்கப்
பூழியன்றன் சுரந்தீரத் தலைப்புண் ணுளர்
பொன்றவந்தாய் என்விருப்பம் பொய்க்க லாமோ
ஏழிசைச்செந் தமிழ்ப்பொதியை வரையி லந்நாள்
எழிலியையும் சிறைசெய்தாய் இமையார் போற்றும்
காழிநகர்க் கவுணியனே அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 8

வானவரைத் துயர்க்கடலில் அமிழச் செய்து
மகிழ்கூர்ந்து நெடுங்காலம் வாழ்ந்தோ னை

தானவன்தன் குலத்தோடும் அழியத் தாக்கும்
சத்தியின்வேற் புகழ்கருதும் தவம்வீண் போமோ
மீனவரை மேருமலை குலுங்க மோதும்
விறலோனே பலகோடி வெற்புள் ளானே
கானவள்ளி மணவாளா அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 9

தவிசாய மலரோனும் கடலிற் றூங்கும்
தாமரைக்கண் முரகரியும், தக்கன் செந்நீர்
அவியாகத் தலையறுத்த வாளுள் ளானும்
அகங்களிக்க விளையாடும் ஆண்மை யீந்தாள்
புவிமீது வானமலர் கொணர்ந்தோன் ஆதிப்
புலவர்குழாம் தினந்தோறும் போற்றும் தொல்சீர்க்
கவிமாலைத் தோளானே அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 10

இச்சைவழிக் குருவாகிச் சமயந் தோறும்
இலங்கும்நீ எனக்கிரங்கி இருந்தாள் சூட்டிப்
பிச்சையுண்பார் திருக்கூட்டம் பொலியக் காட்டிப்
பேரின்பக் கடலமுதாம் பேறும் ஈவாய்
செச்சைநறுங் குராவணிதோள் கொண்ட வேற்கைச்
சேவகனே உரைக்கரிய சீருள் ளானே
கச்சையணி திருவரையாய் அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானே. 11

கங்கைதரு பாலகனை, அருணை மூதூர்க்
காராளர் தொழுமுருகக் கடவு ளானைச்
செங்கைகுவிப் பார்களொடு திரிவான் றன்னைத்
திருப்புகழோன் எனும்நெல்லைச் சிறுவன் பாடல்
சங்கையறக் கற்றுணர்ந்து தினமும் போற்றும்
தன்மையுளார் தமக்கும்அவர் தமைச்சார்ந் தோர்க்கும்
அங்கைநடு வுறும்நெல்லிக் கனிபோல் எய்தும்
அன்னவருட் கருதும்நல மனைத்தும் தானே 12

—

# பதிகம்

## காப்பு - வெண்பா

என்றும் அருணை எழிற்கோ புரமுகப்பில்
நின்றுலகை யாளும் நெடுவேலா - என்றனுளம்
உட்கச் சிலபேர் உரைக்குமொழி கேட்பதற்கும்
வெட்க மிலேயோ விளம்பு.

## அறுசீர்க் கழிநெடில்

தென்னாடு தேடிவந்தன்(று) எனையருணா
கிரியெனநீ செப்பும் பெட்பால்
உன்னுசை கொண்டருணைக் கோபுரத்தின்
முகப்பினில்வந் துருகி நின்றேன்
பின்னாலே அருள்செய்வ திருக்கட்டும்
குகனேநின் பெருமை சான்ற
நன்னுக ரீகநறுந் தமிழ்க்குரிய
பயன்சிறிது நல்கு வாயே 1

திரைநீங்கப் பாடியதும், சீறியவெள
வாலொழியச் செப்பும் பாட்டும்
தரையோரும் அறியஇங்கு பலித்ததுபோல்
உன்கருணை தழைய என்றும்,
புரைதீர்ந்துன் செவிக்குணர்ச்சி உண்டாக
என்றும்,எண்ணிப் புகன்ற பாடல்
உரைவீணே கிடப்பதென்ன? உயரருணைக்
கோபுரத்துற் றெளிரும் வேளே. 2

வஞ்சகர்போல் மவுனமெய்தி யிருப்பானேன்
வாய்திறந்(து)ஓர் வசனம் கூறிச்
சஞ்சலப்பேய் தனைவிரட்டி, அருளாடல்
புரிந்துவக்கும் தன்மை நல்கிக்,
குஞ்சரங்கள் போற்றிரியும் இகலோர்முன்
அரியேற்றிற் குலவச் செய்வாய்
செஞ்சதங்கைத் தாளானே திருவருணைக்
கோபுரத்திற் றிகழும் சேயே. 3

நீயெனக்கு வேண்டியவை அத்தனையும்
கொடுத்தருளி, நினைக்குந் தோறும்
தாயெனவந் தருட்கடலில் குளிப்பாட்டி,
முழுக்காட்டும் தகையோன் என்றால்
சீயெனச்சொல் வார்மனைக்கும் போயிரக்கத்
துணியும்வண்ணம் செய்ய லாமோ?

தீயெனவெற் புறும்அருணைக் கோபுரவா
யிலின்வடபாற் சிறந்துள் ளானே. 4

காதிருந்தும் கண்ணிருந்தும் வாயிருந்தும்
கரமிருந்தும் கமலச் செந்தாட்
போதிருந்தும் அழியாத புகழிருந்தும்
எனக்கிரங்காப் புதுமை யென்னே
வாதிருந்த வாயினரும் புகழ்அருணை
வல்லாளன் வணங்கும் கோவே
கோதிருந்த மனத்தாரைக் குணத்தினராக்
கிடும்சிகரிக் குமர வேளே. 5

இத்தனைதூ ரம்தவித்து எனக்கிரங்கா
திருக்கின்றாய் என்ன செய்தற்(கு)
அத்தனைவார்த் தைகள்அவ்வா(று) அறைந்தனையோ
அறிகில்லேன் அந்தோ அந்தோ
பித்தனைஆண் டருளியது பொய்தானோ
அருணைநகர்ப் பெரியோர் போற்றும்
பத்தனைக்கைக் கிளியாக்கொண்(டு) உயர்சிகரிக்
கருகில்நிற்கும் பழைய தேவே. 6

பொல்லார்சொல் நிந்தைமொழி பொறுக்கறியா(து)
உனைக்கருதிப் புகழ்வேன் றன்னை
எல்லாரும் நல்லவன்என் றியம்பிடச்செய்
துவக்கும்வலி யில்லாய் கொல்லோ
கொல்லாத விரதமுற்றும் தவம்பலியா
திருப்பதென்ன கொடுமை அந்தோ
கல்லாலின் கீழிருந்தார் அருணைநகர்க்
கோபுரத்துக் கந்த வேளே. 7

செம்புநதிப் புனல்சூழ்ந்த திருநெல்லை
யூரில்வந்து செப்பும் சொல்லை
நம்புவதாற் றிருவருணைக் கோபுரத்தில்
வந்துறுதி நவிலும் என்னை
அம்புவியெல் லாமறியத் தடுத்தாண்டு
கொள்ளிலுனக் கழகே யன்றோ
வெம்புகுணத் தமணர்குல வேரறுத்துத்
தமிழ்பாடும் வென்றி யானே. 8

காரிருளும் மைக்குழம்பும் சினைமுகிலும்
மிகநாணக் கறுத்த மேனிச்

சூரிருக்கும் வீரமயேந் திரமழிந்து
கடலேழும் சுவறத் தாக்கும்
போரினுக்கு வல்லவுனைப் புகழ்வேனும்
இகலோராற் புலர லாமோ
தேரிலங்கும் நெடுவீதித் திருவருணைக்
கோபுரத்துச் செவ்வே லானே. 9

முத்தொழிலுக் குரியாரும் தமியேனைத்
தொடராமல், முதுபார் மெச்சும்
சித்தொருங்கு விளையாடித் திருப்பணியெல்
லாமுடிக்கச் சிந்தித் துள்ளேன்
பொய்த்தொடக்கர் மனைதோறும் போயிரக்க
நாணுவது பொய்யோ, விண்ணோர்
கைத்தொழும்பு கொண்டருணைக் கோபுரத்தின்
வடபாதி காக்கும் கோவே. 10

கொன்றருந்துந் தீயோர்புன் நெறிமுழுதும்
தவறி,நல்லோர் கூட்ட மெல்லாம்
என்றடியேன் கருதியவா(று) ஒளிருமெனப்
பரதவிக்கும் எளிய னேன்முன்
மின்றயங்கும் வேலேந்தித் துலங்கும்நீ
ஒருமாற்றம் விளம்பொண் ணாதோ
குன்றம்நிகர் திருவருணைக் கோபுரத்துக்
குருபரனே குறையில் லானே. 11

பழையதிருப் புகழ்க்காரன் பதம்பரவிப்
புதியபுகழ் பாடும் தொண்டன்
கழைவனத்தி லிருந்தருணைக் கோபுரத்தின்
அருணைவந்து, கந்த வேளைப்
பிழைதவிர்த்(து)ஆள் என்னஒரு காரணத்தால்
துதிக்கும்இவை பேச வல்லார்
புழையுறுதிண் திறற்றடக்கைக் களிறெனமுத்
தமிழ்மதங்கள் பொழிவார் அன்றே. 12

---

# பதிகம்

## காப்பு - வெண்பா

பன்னரிய முத்தமிழும் பாடும் பரிசளிக்கும்
தென்னருணைக் கோயிலில்வாழ் தெய்வத்தை - என்னறிவில்
வந்த அநுபவத்தால் வாழ்த்துதுணை வல்லாளன்
தந்த மணிச்சிகரி தான்.

## கலி விருத்தம்

நீதயை புரியென நெருங்கும் என்றனைப்
பாதகர் பகைமையாற் பதறச் செய்தனை
தீதறக் களையும்நின் செயலித் தன்மையோ
கோதறும் அருணையூர்க் கோயிற் றெய்வமே. 1

நற்றவத் திருப்பணி நாடும் என்றனைச்
சிற்றறி வினர்களும் சீறச் செய்தனை
பற்றறுத் தாளும்நின் பரிசிவ் வண்ணமோ
குற்றமில் அருணையூர்க் கோயிற் றெய்வமே. 2

சாலநின் புகழ்பகர் தமிய னேன்தமிழ்ச்
சீலமும் கொடிதெனும் சிலர்சொல் கேட்டனை
மேலவர் பரவும்நின் விருப்பில் வண்ணமோ
கோலம்நீ டருணையூர்க் கோயிற் றெய்வமே. 3

இழிதொழிற் கயவரும் இகழ ஏழையேன்
கழிமனம் வருந்திடல் காண நாணிலை
அழிவுறு நின்திரு வருள்இவ் வண்ணமோ
கொழிதமிழ் அருணையூர்க் கோயிற் றெய்வமே. 4

எளியவர்க்(கு) எளியன்என் றெண்ணி வந்தஎன்
களியறப் பெருந்துயர்க் கடலில் விட்டனை
தெளிதமிழ்ப் பரிசுநீ செய்வதிவ் வண்ணமோ
குளிர்பொழில் அருணையூர்க் கோயிற் றெய்வமே. 5

நலமிகப் பெறவரும் நாயி னேன்றனைக்
கலகவஞ் சகர்குணங் கருதக் கண்டனை
பலகலை புகழும்நின் பரிசிப் பான்மையோ
குலவளத் தருணையூர்க் கோயிற் றெய்வமே. 6

நிறைபொருள் என்றுனை நினைத்து ளேன்றனை
இறையுமெய் உணர்விலார் இகழ லாகுமோ
மறைமுதலாயநின் வழக்கம் ஈதுகொல்?
குறைவரும் அருணையூர்க் கோயிற் றெய்வமே 7

வெண்டகைப் பொடிமிக விழைந்து ளேன்மனம்
குண்டர்வாய் நிந்தையிற் கொதிக்க லாகுமோ
பண்டடி யவர்க்கருள் பான்மை யீதுகொல்?
கொண்டல்சூழ் அருணையூர்க் கோயிற் றெய்வமே 8

நீளநின் பணிநலம் நினைத்து ளேன்றனைத்
தேளதிற் கொடியவர் சினக்க லாகுமோ
ஆளடைந் தவர்தமை அகற்றல் ஆண்மையோ
கோளறும் அருணையூர்க் கோயிற் றெய்வமே 9

நன்றெருங் கருளென நாடும் என்றனை
வன்றெழிற் கயவர்தாம் வையச் செய்தனை
நின்றொடர் புறவென நினைத்தல் பாவமோ
குன்றொளிர் அருணையூர்க் கோயிற் றெய்வமே 10

அன்பொடு பணிபவர் அலக்கண் உற்றழ
நின்பொருள் கவர்பவர் நேயம் உற்றனை
முன்பொரு கனவினில் மொழிதல் பொய்கொலோ
கொன்பொலி அருணையூர்க் கோயிற் றெய்வமே 11

கொலைதவிர் அருணையூர்க் கோயிற் றெய்வம்நன்
நிலையுறக், கொடியவர் நீற, நாடியே
கலைமலி திருப்புகழ்க் காரன் சொல்இவை
தலையுறச் சுமப்பவர் தரும சீலரே 12

---

## பதிகம்

### காப்பு - வெண்பா

அருணகிரி தானென்ற தன்றி ஒருநாள்
சருவ பிரசாதம் தந்தாய் - இருகரத்தால்
அஞ்சேல் அளித்தாய் அருணைநெடுங் கோபுரத்துச்
செஞ்சேவ லாகிருபை செய்

### அறுசீர்க்கழிநெடில்

பரவைமுலைத் துணைப்போகம் கருதிவரும்
சுந்தரற்குப் பைம்பொன் ஈந்த
அரனருளும் மதலையும்,சற் குருபரனும்,
ஆனதுண்மை யாகு மானல்
இரவலர்க்கும் நின்கோயிற் றிருப்பணிக்கும்
விரும்புமெனக்(கு) ஏமம் இன்னே

தரவழக்குண்(டு) அருணைநகர்க் கோபுரத்தின்
வடபாலிற் றங்கும் கோவே. 1

நீயெனக்குச் செய்தபல இடர்களையும்
நினைத்தறிவின் நிறைவில் லாமல்
தீயெனக்கோ பித்தடியேன் செய்தகுற்றம்
அனந்தம்உண்டு, சினக்க வேண்டாம்
தாயெனத்தண் கருணைபொழிந்(து) உனதடியார்
திருக்கூட்டம் தன்னிற் சேர்த்தாள்
சேயெனப்பேர் புனைந்தருணைக் கோபுரத்தின்
வடவருகிற் றிகழும் தேவே. 2

வந்தடிமைப் படுவார்தம் குறைமுழுதுந்
தவிர்த்தருளும் வலியில் லார்போல்
இந்தவஞ்சம் புரிவானேன், என்னுணை
விளையாடல் இயற்றி ஆண்டுன்
சொந்தமெனத் திகழருணைக் கோபுரத்தின்
தூவிகளும் சுரர்கொண் டாடும்
சுந்தரப்பொன் மயமாகக், காட்டிடுவாய்
இகலறுக்கும் சுடர்வே லானே. 3

அந்நாளில் உன்கருணைக் காளாகிக்
களிகூர்ந்த அடிய னேனுக்(கு)
இந்நாளில் எள்ளளவும் இரங்குகில்லாய்
ஆமாகில் இனிமேல் வந்து
தந்நாவாற் றுதிப்பவருக் கென்செய்வாய்
என்றுமனம் தளர்ந்தேன் அந்தோ
வெந்நாகப் பணிபூண்டார் அருணைநெடுங்
கோபுரத்து வென்றி வேளே. 4

கீரனைப்பொய் யாமொழியைப் பகழிக்கூத்
தனைக்குருகைக் கிழவன் றன்னை
நேரனந்தம் புலவர்களை நீயிரந்து
தமிழ்கேட்ட நீர்மை யாவும்
ஊரவராற் கேள்வியுற்றும் உனைப்பாடி
பரதவிப்ப துண்மை யன்றே
சாரமிலாப் புன்கவியோ அருணைநெடுங்
கோபுரத்துத் தனிவே லோனே. 5

சண்டன்வந்து போர்புரியா தாண்டருளித்
தனிவீடு தரவல் லாயேல்

கொண்டலெனக் கொடுத்துவக்கும் பேராண்மை
இகத்திலுறக் கொடுப்பா யென்று
தெண்டனிட்டுப் போற்றிசைக்கும் தமியேன்நெஞ்
சறியாயோ; செப்ப வேண்டும்
கண்டவர்தம் கலிதீர்க்கும் திருவருணைச்
சிகரியில்வாழ் கந்த வேளே. 6

இன்னமெனக் கொருவரமும் தரவேண்டாம்
முன்னாளில் எளிய னேன்பால்
சொன்னசொல்லை மெய்யாக்கத் துணிவதொன்றும்
போதும்இதிற் கூதொன் றில்லை
வண்ணமுலைப் பேதையரோ(டு) என்னுளத்தன்(று)
ஆடியது வம்பாப் போமோ
தென்னருணைக் கோபுரவா யிலின்நிலைக்கு
வடவருகிற் றிகழும் சேயே. 7

புண்ணியசாந் தத்துதித்த வெண்பொடியை
நிந்தைசெய்தார் போன போக்கை
எண்ணியும்சற் றஞ்சாமல்; வள்ளூரம்
புசித்துவக்கும் ஈனர் மாள
வண்ணிலவு சீகாழிக் கவுணியன்போல்
ஒருபெரியோன் வரச்செய் வாயோ
திண்ணியசீர்த் திருவருணைக் கோபுரத்தில்
விளையாடும் செவ்வே லானே. 8

(வள்ளூரம் - பசுவூன்)

துட்டர்களுக் கரசான சூரபன்மன்
பிளவாகச் சுடர்வேல் ஏவி
அட்டதிக்கும் புகழ்விளைத்த நின்னருளே
தஞ்சமென்னும் அடிய னேனைச்
சிட்டனெனப் பலர்கூறத் திருவிளையாட்
டிப்பொழுதே செய்ய வேண்டும்
மட்டவிழ்பூம் பொழிலருணைக் கோபுரத்தின்
கீழ்வடபால் வாழ்செவ் வேளே. 9

நீபமலர்த் தொடையானே நெல்லைவேற்
பெருமானே, நெருப்புப் போலும்
கோபமொடு பொரும்சேவற் கொடியானே
என்றுதினம் கூறக் கேட்டும்
தீபம்ஒரா யிரமிலங்க மூவர்முதற்
றேவர்தொழத் திகழா தேனே

தாபமுறு தருளருணைக் கோபுரத்தில்
விளையாடும் சரத வாழ்வே. 10

குருவாகி அறவிறந்த சமயத்தோர்
தமக்கருளும் குமரா? விண்ணூர்த்
தருவாணர் புகழருணைக் கோபுரத்தில்
விளையாடும் சண்மு கா!என்(று)
ஒருவாறு பகர்வார்க்கும் கருணைபுரி
வாயெனும்சொல் உண்மை யன்றோ
திருவாஞ்சை கொண்டுழலத் தமியேனை
விட்டனையே திகழ்வே லானே. 11

சீராருந் திருவருணைக் கோபுரத்து
முருகோனைத் திருநெல் வேலி
ஊராருக் குயிர்போலும் திருப்புகழோன்
பகர்பாடல் ஒருபத் தொன்றும்
பாராமற் படிப்பவர்கள் அனைவருக்கும்
மெய்ஞானப் பலிப்புண் டாகும்
சேரார்தம் குலமழிக்கும் திறலுண்டாம்
எண்வகைத்தாம் சிறப்புண் டாமே. 12

— —

## பதிகம்

### காப்பு - வெண்பா

முந்தவந்த போது முதிரும் சுரங்கொடுத்தாய்
பிந்தவந்த போதுசில பேயர்களால்—நொந்தகலச்
செய்வாயோ என்றுழலச் செய்தாய் திருச்சிகரிக்
கைவாழ் அருணைமுரு கா.

(கை;— இடம்)

### கலிவிருத்தம்

உருவா கியவுன் கனிவாய் மலரால்
ஒருவா சகம்ஓ திடும்நாள் உளதோ
கருவா ழிகடத் தும்அயிற் குகனே
திருவாழ் அருணைச் சிகரிக் குருவே. 1

அன்பால் அடியேன் அறையும் தமிழே(டு)
உன்பார் வையுறும் தினமொன் றிலையோ
தென்பார் புகழ்சீர் அருணை புரியில்
பொன்பா(வு) ஒருகோ புரவே லவனே. 2

சீரார் அருணைச் சிகரிக் குக!என்
ஆரா தனைசெய் வ(து)அறிந் திலன்என்(று)
ஊரா ரிடம்ஓ தவிடுப் பினும்நின்
பேரா யிரங்கோ டிபிதற் றுவனே. 3

கல்லா லடியிற் கடவுட் குருவாழ்
வல்லார் புகழ்வா சகம்ஒன் றுணர்வோன்
எல்லா ரும்இறைஞ் சருணைச் சிகரிக்(கு)
உல்லா சம்விளைக் கும்ஓர்உத் தமனே 4

செங்கைக் கிளியென் றுதினம் சொலும்நின்
அங்கைத் திருநீ றும்அளித் திலையோ
மங்கைத் திரள்வாழ் அருணா புரியில்
கங்கைச் சடையார் தருகண் மணியே 5

பொன்னா சைபொருந் திமெலிந் துளநான்
உன்ஆ கரம்உன் னிவணங் கிலனே
நன்னா வலர்நா டருணைச் சிகரிப்
பன்னா கமயிற் பரியூர் பவனே 6

கருணைக் கடல்கண் டுகளிப் புறுமா(று)
இருள்முற் றும்இரிந் திடல்எப் பொழுதோ
அருணைச் சிகரிக்(கு) அழகாம் முருகா
தருணத் தில்இரங் குவதுத் தமமே 7

மாவா கியசூ ரன்மடிந் தொழியப்
போவான் வளர்பொற் சிகரிக். கருகில்
தேவா தியர்சேர் அருணா புரியை
நாவா ரநவின் றிடல்நம் தவமே 8

காழிப் புலவோன் நிகர்கா ரணரால்
ஆழிப் புவிசொல் அருணா புரியில்
கோழிக் கொடிவேள் குளிர்கோ புரமே
ஊழிற்(கு) அயரா நலம்உய்த் தருளே 9

மூவர்க் கரசா னமுதற் பெருமாள்
சேவற் கொடிகொண் டுயர்சே வகவேள்
ஆவற் றருதென் அருணைச் சிகரிக்(கு)
ஏவற் றொழில்செய் யஇசைந் தனமே 10

அருணா புரிஆ லயமூ டுயர்வாம்
ஒருகோ புரம்உற் றகுகன் றனையே
குருவாம் எனநம் பியகொள் கையினேன்
வெருளா நலம்மே வுவதெக் கணமே 11

தூயோர் புகழ்சோ ணகிரிச் சிகரிச்
சேயோன் மகிழ்செய் யதிருப் புகழோன்
வாயோ தியவண் டமிழ்கற் பவர்தாம்
மாயோன் எனும்வாழ் வுபடைப் பவரே 12

---

## படை வீட்டுப் பதிகம்

சகளச தாசிவன் விழியில்வ ருஞ்சிறு சாமியெ னப்பகரார்
நிகரமெ லிந்துல கிற்சுழ லும்படி நீயெனை விடலாமோ?
அகவிய செஞ்சிகி யிற்கதிர் வேலுடன் அவிர்தரும் ஆரமுதே
சிகரந லம்பெறு கோபுரம் நீடிய திருவரு ணைக்குகனே. 1

சத்திர மொன்றுசெ யும்படி நாடிய தலமதி லகழ்கூபம்
குத்திர மாயது கண்டுமி ரங்கிலை குளிர்புனல் மிகைநல்காய்
அத்திர மேவிய தாருகன் நாணுற அதையொரு கைக்கொண்டாய்
சித்திர கூடம்நெ ருங்கிய வீதிகொள் திருவரு ணைக்குகனே. 2

அங்கணி லத்திடை மற்றையர் தாமும்அ றிந்துசொ லச்செயுமா(று)
இங்கடி யேனுளும் ஓதிய நீஇனி என்றருள் புரிவாயோ
பங்கய னெவ்வொரு சென்னியும் மூன்றிடி பட்டுய ரக்கண்டாய்;
செங்கம லத்தடம் மிஞ்சிய சீர்திகழ் திருவருணைக் குகனே. 3

பூதல மீதுபி றந்துள! மைந்தர்பு ரிந்தறி யாதகொடும்
பாதகம் எத்தனை செய்யினும் நின்துதி பகர்தலின் ஒழியாதோ
மாதவன் ஒஞ்சம யிற்பரி யேறிவ ரும்பெரு மைக்குமரா!
சீதம திக்குவ டைந்துறும் வெற்பவிர் திருவரு ணைக்குகனே. 4

ஆறுமு கத்தொரு தெய்வம தேபரம் ஆகுமெ னத்தெளியார்
கூறுமி கழ்ச்சிசு டச்சுட நொந்து கொதிப்பது சம்மதமோ?
நீறுமி கப்புனை யும்கவு மாரர்நி னைத்தவ ரந்தருவாய்!
தேறுத மிழ்ப்புல வோர்பல ராலுயர் திருவரு ணைக்குகனே. 5

கல்வரை யன்னம னத்தினர் தம்மொடு கலகம்நி தம்செய்து
பல்வகை யின்னல்ப டுந்துயர் என்றுப றித்தெறி யத்துணிவாய்
நல்வரம் வேணப டிக்குத வும்கரு ணைக்கட லாம்முருகா
செல்வமி கப்பொலி யப்பெறு சீர்திகழ் திருவரு ணைக்குகனே. 6

புண்ணிய மில்லவர் நெஞ்சுறழ் பாறைபு னற்றரும் என்றடியேன்
எண்ணிய துன்னுரை டாலெனும் உண்மைஇ லங்குவ தெத்தினமோ

நண்ணிய வாறுரு வங்கொடு தொண்டர்ந டுக்குல வும்குமரா
திண்ணிய மாதவர் பற்பலர் கூடிப திருவருளைக்குகனே. 7

பூரண மாகிய நீஎனுள் நின்றுபு கன்றவை பொய்த்திடில்இங்கு
ஊரவர் தேர்கில ராயினும் நின்திரு வுள்ளம்ம றந்திடுமோ
கோரமி கும்பல சாரணர் வாதுகு லைந்திட வென்றவனே
தேரணி வீதிவி ழாமலி வெய்திய திருவருளைக்குகனே. 8

பாவனை யிற்பதி யாமல்உன் மெய்ப்புகழ் பாடும்வி ருப்புறுநெஞ்(சு)
ஏவரும் நித்தம்இ கழ்ந்திட நாணும்இ ளப்பமு னக்கிலையோ
மாவல றித்தரை மேல்விழ வெட்டிவ ரும்கதிர் வேல்முருகா
தேவர்ப திக்கிடை யூறுத விர்த்தருள் திருவருளைக்குகனே. 9

நம்புமெ னைப்பல சோதனை செய்வது ஞாயம லத்தமியேன்
வெம்புறு சோகமி குத்த(து)ஒ ழித்தருள் வெள்ளமு ழுக்கருள்வாய்!
அம்புய வேதன்அ ழும்படி குட்டிஅ வன்தொழில் செய்தவனே
சிம்புளு ருக்கொடு சீயம டர்த்தவர் திருவருளைக் குகனே 10

சொற்பன பத்தியில் எனை றனை யுன்வது தோளில்உ றுங்கிளியென்(று)
உற்பன மாகஉ ரைத் தூமிவ் வண்ணம்உ மூன்றிட விடலாமோ
கற்பனை நூல்கள்வி ளம்பரி தாகிய காரண நிலைநல்கும்
சிற்பர தத்துவ தேசிக னுவரு திருவருளைக் குகனே. 11

செய்யவ ளும்கலை மங்கையும் நன்கமர் திருவருளைக்குகனைப்
பொய்யர்இ கழ்ச்சிபொ றுத்தொரு கற்றொடு புகழ்புனை நெல்வேலிப்
பையல்அ திற்புனல் எய்தவி ளம்பிய பதிகமி கப்பகர்வார்
வையமும் வானும் மதிக்குந லம்கொடு வாழ்வது நிச்சயமே. 12

— —

குருவே துணை

சிவமயம்

# அருணைப் பதிற்றுப்பத் தந்தாதி

## காப்பு - வெண்பா

அருணைப் பதிற்றுபத் தந்தாதி பாடிக்
கருணைக் கடலமுதைக் கண்டு – தருண
மடவார் மயலுமற்று வாழ்வதற்குக் காவல்
கடவா ரணத்தின் கழல்

மயலும் என்ற - உம்மை, அதன் இனமான பொன்னையும் மண்ணையும் தழுவி நின்றது.

## நூல் - அறுசீர் ஆசிரியம்

பூவாழ் புலவன் மறைமுதலாப்
புகல்நூல் முழுதும் புகழருணைக்
கோவாம் ஒருவன் அருட்பேறே
குறித்தும் தமியேன் கொதிப்பானேன்
காவார் கரம்ஐந் துடையானும்
கதிர்வேற் குகனும் கருதுதுணை
ஆவான் முயலும் தவத்தீரே
அடியேன் எதிர்வந் தறையீரே.

புலவன்–பிரமன், காஆர்கரம்ஐந்து-கற்பத்தரு ஐந்தைப்போல ஐந்து கையுடைய கணபதி, ஆவான் - ஆகும் பொருட்டு. 1

அறையும் கழற்பூண் குலவுதிரு
அடியால் இயமன் தனையட்டாய்!
உறையும் அருண புரிக்கோயில்
உட்போய் வணங்கும் உணர்வுடையார்
தறையும் பிலமும் தருநிழலும்
தரினும் பொருந்தார், தவம்புரியார்
மறையும் கருதார் ஒருநால்வர்
வழுத்தும் தமிழால் மகிழ்வாரே.

பிலம் - நாகலோகம் (பாதாளம்) 2

வாரார் முலையார் நடம்பயிலும்
மறுகில் முதிர்சூல் வளையுலவும்
சீரார் அருணைப் பதியாளும்
சிவனே இமையோர் தினம்பரவும்

காரார் களத்தெம் பெருமானே!
கண்மூன் றுடைய காரணனே,
நீரார் சடிலத் திறையோனே
நின்சேய் எனும்பேர் விழைந்தேனே.

மறுகு – வீதி. களத்து – கழுத்தையுடைய, சடிலம் - சடை 3

தேனார் இதழித் தொடைமுடியும்,
திருக்கண் இமையாத் தெருள்முகமும்
ஊனார் மழுமான் உறுதோளும்,
உண்ணு முலையாள் உறையிடமும்,
கானார் புலித்தோல் மருங்கும்,மலர்க்
கழலும் குலவக் கருணைபொழிந்(து)
ஆனார் மிசைவந் தருணைநகர்
அறிய ஒருக்கால் அருளாயோ

இதழி - கொன்றை. ஆன்மிசை என்பது, ஆர்விகுதி பெற்றது எதுகை நோக்கி, ஆன் - இடபவாகனம். 4

அருள்வாழ் வதனைப் பெரிதும்விழைந்(து)
அயரும் தமியேன் அகிலத்திற்
பொருள்வீ றதனை லிறுமாக்கும்
பொல்லார் இகலப் புலர்கின்றேன்
சுருள்பூங் குழலார் அணங்காடும்
சோணு சலத்தெம் பெருமானே
இருள்வே தனைதீர் அடியவரோ(டு)
இருக்கும் பெருஞ்சீ ரீந்தருளே

அணங்கு - பரத நாட்டியம் 5

ஈந்தின் கனியும் நறுந்தேனும்
இலையும் கிழங்கும் எயினர்குழாம்
மாந்திக் களிக்கும் நெடுஞ்சாரல்
மருவும் சோண வரையானே
ஏந்தி இறுமாந் தெழுமுலையார்
இச்சைக் கடலூ(டு) இடைவுறுநான்
நீந்திக் கரைசேர்ந் துனதிருதாள்
நினையேன் ஒருகை நீட்டாயோ

அருணைமலையில் வாழும் வேடமக்கள், புலால் உண்ணுமல் ஈச்சம்பழம் கனி, தேன் இலை கிழங்கு இவற்றையுண்டு மகிழ்வார் என்பதாம், எனவே மற்றைய நகர்வாழ்மக்கள் ஊன் உண்ணு;

ரென்பது கூறுமலே விளங்கும். இஃது ஆசிரியர் கூற்று. மாந்தி - உண்டு, ஏந்து - மேலெழுந்து. நீந்தி – வெறுத்து, ஒரு கை நீட்டுதல், கரையில் தூக்கி விடுதற்காக, காலைத் தூக்கிநின்றுடும் தெய்வமே என்னைக் கைதூக்கி ஆளும் ஐயா, என்பது காண்க. 6

நீட்டும் துதிக்கை கயிலையென
  நிலவி, இரண்டா யிரமருப்புக்
காட்டும் களிற்றாய் அருணைநகர்க்
  கடவு ளானே கடையேனை
ஆட்டும் தொழிலுன் றனதாம் என்(று)
  அடியார் பலரீண் டறைந்தமொழி
கேட்டும் தளர்ந்தேன் என்செய்வேன்
  கிருபைத் திவலை தெறியாயோ

இறைவன் யானை ஐராவணம், இரண்டாயிரம் கொம்புடையதாம். ஆட்டும் தொழில் - உலகை இயக்கும் செயல் 7

ஆயும் கலைமுற் றுடைவாள்மூக்(கு)
  அரிந்தாய் எனத்தேர்ந்(து) அவற்றிடைப்போய்
மாயும் பிழைதீர்ந் தெழுத்தைந்தால்
  வழிபட் டுயர்சீர் வழங்காயோ?
காயும் கனல்வெற் பெனநீண்டாய்!
  கரியோன் மலரோன் அறிவரியாய்
பேயும் கணமும் பெரிதார்க்கும்
  பிணக்காட் டினும்வாழ் பெருமானே

கலைமகள் மூக்கை அரிந்தது, சிவனமிசமாக வந்த வீரபத்திரர், தக்கயாகத்தின் போது. அவற்றிடைமாய்தல் - புராண வரலாற்றில் மயங்குதல். கனல்வெற்பு – நெருப்புமலை. 8

மானேந் தியகை யுடையானே!
  மழமால் விடைமேல் வருவானே!
பானேர் மொழியாள் அமர்பாகா!
  பசும்பொற் சிலையாய் எனக்கூவும்
நானே வலிதுன் திருவருணை
  நகர்வந் தடைந்தேன், நலம்புரிவாய்
ஏனேன் எனமுன் ஒருநால்வர்
  எதிர்சென் றதுமெய் யெனுமாறே

மழமால் விடை – இளமையான பெரிய காளை வாகனம். பால் நேர் மொழி-இனியசொல். பொற்சிலை – மேருமலையான வில். 9

மாறு படுந்தா னவர்தமக்கும்
வளங்கள் அளித்தாய் என,முதுநூல்
கூறு மொழிகேட் டுனேயடைந்தேன்
கொல்லா நலமே குறித்துள்ளேன்
வேறு நெறியார் களிநோக்கி
வெருளத் தருமோ? விநாயகனோ(டு)
ஆறு முகத்தாற் பயந்தானே!
அண்ணு மலையென் றமர்வானே

வேறு நெறியார் – புறச்சமயிகள். அண்ணுமலை யென்னும் - மலை வடிவமாக. திருவருணுசலம் மலை மட்டுமல்ல - இறைவன் வடிவமே மலையென்பது கருத்து. 10

## கலி நிலைத்துறை

அமரர் தந்துயர் பொறுக்கொணு(து) அமுதருள் செய்தோன்
கமல வேதியன் தலையிலேற் றருந்திய கடவுள்
குமர வேட்பயந் தொருசுடர் வேற்படை கொடுத்தோன்
எமனை வென்றவன் அருணையூர் எந்தமக் கினிதே.

இறைவன் கண்ணீர்த் துளிகளே பூமியில் வீழ்ந்து மரமாகிக் காய்த்த காய்கள் உருத்திராக்கம். கண்மணி என்பர். 11

இனிய பாற்கடற் றுயின்றவற் காழியொன் றீந்தோன்
தனிய ஞவட நீழலுற் றன்றொரு சதுரர்
கனிய மெய்ப்பொரு ளுதவிய காரணக் கடவுள்
பனிய ருப்பொழில் அருணைகண் டுய்ந்துளார் பலரே

வட நீழல் - கல்லாலமர நிழல், சதுரர் – சனகாதியர் நால்வர் 12

பலர்மு ளுள்வரம் பெறக்கொடுத் தருளிய பரமன்
திலக வாணுதற் கவுரிபங் குடையவன் சிலம்பென்(று)
இலகு மூர்ப்பெயர் கழறினுர் பெறுங்கதி யெய்தற்கு
அலகில் மாதவம் புரிவது கருதிடின் அவமே

வாள்நுதல் – விளக்கமான நெற்றி சிலம்பு-மலை. இறைவன் பெயரே ஊர்ப் பெயரான தென்பதாம். 13

அவல நெஞ்சொடு சந்ததம் போர்பொரு தயர்வேன்
தவமு டிந்துனை விடையின்மேற் காண்பதெத் ததியோ
பவள வாயுமை பங்கனே! பற்றலர் எரியச்
சுவண மாமலை விற்கொளும் சோணமால் வரையே

அவல நெஞ்சு - துன்பமுற்ற மனம். விடை – இடபம். சுவண மாமலை – பொன்மலை (மேரு) சொர்னம் என்ற வடசொல், தமிழில் சுவண மென்ருயிற்று. 14

மால வன்விடை யுருக்கொடு சுமக்கும்வாழ் வுறுவான்
சூல முத்திரை தரித்துநின் றேத்திய சுடராங்
கால காலனைக் கனல்வரை யாமெனக் காணும்
சீலம் தாள்மலர்த் தாதுகொண் டுயர்ந்ததென் சிரமே

இறைவனுக்கு இடப வாகனம் – திருமால் ஒரு சமயம் கொண்டது (மால் விடை) அறம் இடபமாயிருப்பது (தரும விடை) ; நந்தி தேவர் (நந்தி விடை) என மூன்று வகை. 15

சிரமொ ரைந்துறு சோதியை, மலரவன் திருமால்
பரவும் ஆதியைப், பழுதுரு அருணையம் பதியின்
அரசை நாடொறும் பணிந்துயர்ந்(து) அவன்மக வாகி
இரவ லோர்குலங் களைந்திடல் என்னது விருப்பே.

இரவலோர் – யாசிப்பவர். 16

விருப்பும் ஏனைய வெறுப்புமற் றருணையின் மேவிப்
பொருப்பு மேனியம் பரமனைப் புகழ்நலம் பொருந்தில்
கருப்பு வில்லியும் பிரமனும் மறலியும் கலங்கி
நெருப்பு நேருறு பஞ்செனத் தொலைவது நிசமே.

கருப்புவில்லி – கரும்பு வில்லுடைய மன்மதன். கரும்பு, கருப்பென வலித்தது. 17

நிசமெ லாந்திகழ் அருணையிற் குடிகொளும் நிமலன்
அசமு கத்தின னாகிடத் தக்கனை யடர்த்தோன்
பசலை யார்முலைப் பங்குடைச் சங்கரன் பழைய
குசவ னார்தலை யணிந்தவீ றுணர்ந்தவன் குருவே

அசமுகத்தினன் – ஆட்டுத்தலையுடையவனாக, பசலை–தேமல் குசவன் - பிரமன், படைத்தலுடையவனாதலால் 18

குருவும் தெய்வமு மாகிய பசுபதி குறைதீர்
அருணை மாநகர்க் காவலன் ஆனினத் தரசில்
வருப ராபரன் அல்லது மற்றொரு தெய்வம்
ஒருவர் கூறினும் அவனருட் செயலென லுயர்வே.

ஆன் இனத்து அரசு – பசுக்குலத்தின் தலைமை இடப தேவன் என்பதாம். 19

உயர்ந்த சோணவெற் பாமென நிலவிய ஒருவன்
வயங்கொள் மால்விடை மேல்மழு மானுடன் வருவோன்
முயங்கு பூண்முலை யாளுடன் ஆடிய முறைதேர்ந்(து)
இயங்கு பேரறி வுடையவர் எங்குலத் திறையோ

ஆடிய - திருநடம் புரிந்த.

## *கலிந்நாழிசை*

இறைவ னேஅரு ளுபுரி ஈசனே
மறைய வன்றலை யிற்பலி வாங்குவாய்
முறையு னக்கென முன்னிநின் றேத்திடிற்
குறைவு ருதகு ணக்கடல் எய்துமே. 21

எய்து முப்புரம் அன்றெரி செய்தவன்
பைதி கழ்ந்த பணியணிப் பண்ணவன்
கைதை மாமலர்க் கைத்தவெற் பாயநாள்
வைத வாமழு மான்எவண் உற்றதே.

எய்து – அம்பை ஏவி, பை - விடப்பை, பணி - பாம்பு, கைதை – தாழைமலர் பிரமன் முடி காணப்போய்க் காணுமல் தாழை மலரைப்படைத்து இது முடிமீதிருந்ததென்றதால் அம்மலர் இறைவனுல் வெறுக்கப்பட்டது. வைதவா - கூர்மை மாருத. 22

உற்ற தொண்டர் உறுகணெ லாமறச்
செற்ற பான்மைச் சிவன்வடி வாமெனப்
பெற்ற தாய் பிறங்கலைச் சூழுவார்
அற்ற மோர்மருப் பானையொப் பாவரே

பிறங்கல் – மலை, உறுகண் – துன்பம், ஓர்மருப்பானை - ஒரு காம்புடைய யானைமுகமுடைய கணபதி 23

ஆவ தைக்குளம் அஞ்சலு ருர்களாம்
பாவ மாந்தர் படுகளம் பார்ப்பவர்
தேவ தேவன் திருவரு ளுபுரி
மேவல் உண்டென மேதினி சொன்னதோ.

ஆ வதைக்கு – பசுக்கொலைக்கு, படுகளம் – கொலைக்களம். 24

சொன்ன வில்லுடைச் சோணவெற் பாதிபன்
புன்ன கைத்தழல் போய்ப்புரஞ் சுட்டதும்
கன்னல் மாரனைக் கண்ணெரி செய்ததும்
இன்ன வாறென் றியம்பவொண் ணுதகே.

சொன்னவில் - தங்கமலை வில், சொர்ணம்-சொன்னமாயிற்று கன்னல் - கரும்பு. 25

ஆத வன்மதி அங்கியுங் கண்களாம்
நாத ளுகிய நல்வரை மீதுறப்
போதல் நாடிப் புகழ்இழந் தான்அரி
பாதம் வேண்டிப் பரிசுபெற் ருனரோ.

மீதுஉற – மேலேகாணப் போய், போதன் – பிரமன் பொய் கூறிக் கெட்டான், அரி – திருமால் அடிதேடிக் காணுமல் புகழ் பெற்ருன். 26

ஆனு ளானை அருணையிற் சென்றுகண(டு)
ஊனும் நெஞ்சும் உருகத் துதிபுரிந்(து)
யானு மென்னதும் இன்றிய சீர்பெறிற்
கூனும் வார்சிலைக் கொற்றவன் அஞ்சுமே.

ஆன் உளான் – இடபமுடைய சிவன், ஊனும் - உடலும் யானும் – என்னதும் யான் எனதென்ற அகங்காரம், மமகாரமென்ற இரண்டும், இன்றியசீர் – எல்லாம் இறைவன் செயலென்ற நிலை, கூனும் - வளைந்த வில் 27

அஞ்சு பூதமும் ஆகிஅப் பாலுமாய்
நஞ்சு தின்றுயர் நாதனு மானவெற்(பு)
எஞ்சு ருநலம் என்றனக் கீயுமேல்
விஞ்சு தீயர்வெ ருண்டொழி வார்களே

ஐம்பூதம் - மண், நீர், தீ, காற்று, வெளி என்பன. அப்பால் உள்ளது – காத தூரம் 28

வாரி யிற்றுயில் வண்புகழ் மால்விடும்
தேரி னற்கருள் செய்தவன் சேர்வதாம்
ஊரி னத்துள் உயர்அரு ணைபுரிச்
சீரி யர்க்கெழில் தேவர்ஒவ் வார்களே

வாரி - பாற்கடல், தேரினன் - அருச்சுனன், திருமால் தேர் விட்டது பாரதப் போரில் 29

ஒவ்வ லின்றி உயர்அரு ணைபுரிச்
செவ்வ னற்கிரிச் சித்தன்முன் தேவராற்
பவ்வ நஞ்சைப் பருகிய தோர்கலார்
தவ்வ வெல்லும் சதுரரைச் சார்மினே

ஒவ்வல் - ஒப்புதல், பௌவநஞ்சு –கடல்விடம், தவ்வ – தாஞ மாறு, சதுரர் - வீரர் 30

## வெண்டளைக் கலிப்பா

மின்னிலங்கும் வேற்படையாய் வெஞ்சூர னைத்தடிந்த
பன்னிருகைச் செவ்வேட் பயந்தான் இருக்குமிடம்
கன்னி அணங்கார் கலபமயி லோடாடும்
தென்னிசையும் சாரற் றிருவருணை மாநகரே

செவ்வேட் பயந்தான் - முருகனைப் பெற்றவன் 31

மாநாகம் என்பும் மலரிதழி பூண்டபிரான்
ஆநாகம் ஓங்கும் அருணையூர்க்கு ஆசைகொண்டோர்
காநாகத் தோர்திருவும் கற்பனையாம் என்றுணர்ந்து
தீநாகம் அன்னநெஞ்சை செற்றுவக்க வல்லாரே

மாநாகம் – பெரியபாம்பு, ஆம்நாகம் - வானம். ஆம்நாகம் என்பதில் மகரமெய் மெலிந்தது. பிராணும்நாகம் - பிராணுகை வானோங்கிய மலை, கா – கற்பகத் தருவுடைய, நாகத்தோர் - தேவ தேவர்கள் 32

வல்லார் பலர்தாமும் வாழ்த்திசைக்கும் வான்மழுவார்
கல்லால் நீழற் கடவுளார் கண்ணுதலார்
அல்லார் களத்தார் அருணைப் பதியடைந்தாற்
பொல்லாரும் உண்மைப் புகழ்பொருந்த வாழ்வாரே.

அல்ஆர்களத்தார்-இருள் பொருந்திய கழுத்தினர் (நீலகண்டர்) 33

வாழை நறுங்கனித்தேன் வாய்க்கால் முதிர்ந்தாறுய்த்
தாழையுறு நெய்தற் நலம்புரக்கும் தண்சாரல்
மாழைபொரு சோண வரையான் மழைவிடைமேல்
ஏழைபங்க னுவான் எமக்கினிய பெம்மானே

தாழை - நெய்தல் என்ற கடற்சார்பான இடத்திருப்பது மாழை - பொன் 34

பெம்மான், புராரி, பிறைசூடும் பீடுடையான்,
எம்மான்,என் றேத்தும் இயல்புடைய மேலோரைப்
பொய்ம்மான் விழியார் புணர்முலைநேர் [ பொன்முடியான்
வெம்மான் மலர்க்கணைகள் வேதனைகள் செய்யாவே

மான்விழி என்பது வெறும் உவமையாதலின், பொய்மான் விழி என்றார். வெம், கொடி, மான் – மயக்கம் தரும் (பொன்முடியான் - மன்மதன். 35

செய்யாள் அகலாத் திருவருணை மாநகரத்(து)
ஐயா னனத்தெம் அரசே! அருட்கடலே!
மையாரும் நெஞ்சத்தால் வாடித் தளர்வேனைப்
பொய்யாளர்க்(கு) அஞ்சாப் புகழுதவி யாண்டருளே

செய்யாள் – திருமகள். மைஆரும் – அஞ்ஞான மயக்கமுற்று 36

ஆண்ட குருவாகி அன்றொருவன் முற்றேன்றி
வேண்டலெல்லாம் நல்கி விளையாடல் உண்மைஎன்றால்
மாண்டழியா வண்ணமென்முன் மால்விடைமேல் வந்தருள்வாய்
நீண்டபுகழ்ச் சோணகிரி நின்ற பெருமானே

ஒருவன் – குகை நமசிவாயர் 37

மானியார் நெஞ்சம் மகிழச் சமணொழித்த
கோனில் ஒருவன் குலவும்நலம் காட்டாயோ
வேனில் மகவேளை வெந்துவிழப் பார்த்தோனே
ஆனியுருத் தொல்சீர் அருணைப் பதியானே.

மானியார் - மங்கையர்க்கரசியார், கோன்-திருஞானசம்பந்தர் வேனில் - வசந்தகாலம், ஆனி-கெடுதல். 38

யானிடைந்து வாட்டமுறும் இந்நாளி லென்னுடனே
நானிலத்தோர் தாமும் நலியப் புரிந்தாயே
பானிறத்து வெண்ணீறும் பாம்பும் புனைந்தோனே
தேனிழியும் தண்சாரற் றென்னருணை வெற்பானே

பால்நிறத்து - பானிறத்து என்றாயிற்று 39

வெற்பனைய கொங்கைநல்லாள் மேவும் இடப்பாகர்
சிற்பரமாஞ் சோணவரைச் சித்தாளன் றேங்குமென்னைச்
சொற்பனத்தில் அவ்வாறு சொல்லவைத்தோன் வேறுளனோ
பொற்பமைந்த சீலம் புனையும் புயத்தானே.

சிற்பரம் - ஞானவடிவம் 40

## அறுசீராசிரியம்

புயங்க மாலிகைப் பரமனை அருணைவான் பொருப்புடைப் புத்தேளைக்
கயங்கொள் வார்கடற் பிறந்துல கழவருங் கடுவமர் களத்தானை
வயங்கு லாவிய மழுவொடு சூலமும் வைத்தகைப் பெருமானை
முயங்கு பூண்முலைப் பானுகர்ந் தருந்தமிழ் மொழிபவர் பிறவாரே.

புயங்கமாலிகை - பாம்பு ஆரம், கடுஅமர் - விடமுள்ள. 41

பிறவி வேர்களைந் தம்பலத் தாடிய பெய்கழற் பெறவேண்டி
அறவும் வாட்டமுற் றஞ்செழுத் தோதிடும் அறிவுடைப் பெரியோரைக்
குறவர் வேலனை வழிபடும் அருணையங் குன்றமைத் திடலோர்ந்தும்
பறவை போல்மனம் சுழல்வது தவிர்க்கிலாப் பாவமென் பகர்வேனே

அறவும் - மிகவும், குறவர் வேலன் - வேடர் வழிபடும் முருகன். 24

பகலை, ஆயிரங் கண்ணனை, வேதனைப் பாற்கடற் றுயின்றோனைத்
தகர மோதியும் தக்கனார் ஒண்முடி தழலுறப் பெய்தாரான்
நிகரி லாதுயர் அருணைமா நகர்ப்புகழ் நினைப்பவ ரெவரேனும்
சகள மூர்த்தியொப் பார்எனத் தெளிந்தவர் தமைத்தொழச் சலியேனே

பகலை - சூரியனை, ஆயிரம் கண்ணனை - இந்திரனை, தகர - வலியழியும்படி. 43

கலிக்கும் நெஞ்சகத் தொருசிறு தமியனேன் தழல்வரைப் பெருமானைப்
புலிக்கும் வீடருள் புனிதனை அரவணி பொலிந்தமற் புயத்தானை
எலிக்கும் வார்கடற் புவிமுழு துதவிடும் இறைவனைத் துதிகூறிக்
கலிக்கு மைந்தர்நேர் புலையரை யனுதினம் கறுவிடப் பெற்றேனே·

கலிக்கு மைந்தர் – கலிபுருடனுக்கு மகன் போன்ற கொடியவர்' புலி - புலிப்பாணி, எலிக்கு - முற் பிறவியில் எலியாயிருந்தவர், மாபலிச் சக்கரவர்த்தி. 44

பெற்ற மேறிய பெருத்தகைக் கடவுளைப் பிரமன்மா லறியாத
கொற்ற மால்வரை யுருக்கொளும் பரமனைக் குறித்துநின் றெழுத்(து)ஐந்தும்
சொற்ற மேலவர் பெறும்பய னுணர்ந்துமென் தொடக்கறு மடநெஞ்சம்
குற்ற மாயிரம் புரிந்திடத் துணிவுறு கொடியநிர் கொளலென்னே.

பெற்றம் - இடபவாகனம். 45

என்னை வாவெனக் கருணையால் அழைத்தவன் எழில்மலி கமலப்பூப்
பொன்னை வாணியைப் பணிசெ[illegible]ம் மலைமகற் புணர்ந்தவன் [illegible]ரமூன்றும்
முன்னை நாள்எரித் தமரரைப் புரந்தவன் முதிர்புகழ் அருணேசன்
தன்னை நாடிய சதுரருக் களித்தசீர் தரின்மிக நலமாமே

சதுரர் – சைவ சமய குரவர்கள் நால்வர் பெருமக்கள் 46

நலஞ்செய் தாயென மகிழ்வுறுத் தாதையை நானிலத் தினர்காண
வலஞ்செய் வாள்கொடு தறித்தவற் கருளிய வரதனை மாற்றேறும்
பொலஞ்செய் மாமதில் அருணையிற் றுதிசெயும் புண்ணியம் விண்போமேல்
அலஞ்செய் தீயவர்அ தட்டல்கேட் டஞ்சியுன் அயர்வது மலிவாமே

வாள் - மழுப்படையால், காலைவெட்டியவர் சண்டேச நாயனர் 47

மலியும் மூரலங் கணிகையர் நடஞ்செய மயிலினம் மனநாணும்
மெலிவில் சீர்திகழ் அருணையூர்ப் பரமநீ வியன்தமிழ்ப் புலவோர்தம்
கலியெ லாமறக் கனன்றது மெய்யெனிற் கடையனேன் மிடியாலே
புலிமுன் ஓர்சிறு மறியெனத் தளர்ந்துளம் புலர்வது தவிர்ப்பாயே

மூரல் – குறுநகை. மறி - ஆட்டுக்குட்டி 48

பாய லாமெனப் பணிமிசைக் கிடந்தருள் பழுத்துயிர் முழுதாளும்
மாய னார்விழி சுமந்தநின் பதங்களை மறந்துநான் உய்வேனோ
தூய வாண்நகை அணங்கினர் நடம்பயில் சோணவெற் புடையானே
நீய லாதொரு துணையிலை வேறற நிறைந்தநீ யிரங்காயே 49

இரங்கும் நெஞ்சினர் மிடியினுற் றளரவும் ஏனைய குணத்தோராம்
குரங்கர் ஆர்வமுற் றுலவவும் செய்யுமிக் கொடுமையை மறவாயோ
வரங்கள் வேணமட் டரக்கரும் பெறச்செயும் வளரருட் சிவனே நன்
மரங்கள் நீடிய சாரலஞ் சோணமால் வரைஎன வந்தோனே

ஏனைய – இரக்கமற்ற குரங்கு போன்றவர் 50

## கலி விருத்தம்

வந்தூர் மலர்மா ரனைவென் றெருசேய்
தந்தூ ரலர்தாங் கவுணர்த் தடியச்
செந்தூ ரிலனுப் பினர்சேர் அருணை
முந்தூ ரெனவே தமொழிந் திடுமே.

வந்து ஊர் - தென்றலைத் தேராகச் செலுத்தும் மன்மதன், சேய் தந்து - முருகனை உதவி. ஊர் அலர் - ஊரினர்பேசும் பழமொழி, முந்துஊர் – முதன்மையானதலம். 51

மொழியும் புகழ்மு தருணைப் பதியிற்
கழியும் பர்கள்கண் டுதொழும் பரமன்
வழியும் கருணைத் தணிவா ரிதியூ(டு)
இழியும் தவம்என் றெனைஎய் துவதே

கழிஉம்பர்கள் - மிகுதியான தேவர்கள். வாரிதியூடு - கருணைக் கடலுள் (இழியும் – இறங்கும் படியான) 52

எய்யா மல்இகழ்ந் தவர்முப் புரமும்
பொய்யா கநகைத் தருள்புண் ணியனர்
செய்யார் அருணைச் சிவனர் அவரை
மெய்யா ளர்விரும் பிவணங் குவரே

எய்யாமல் - அம்பை ஏவாமலேயே. செய்ஆர் – வயல்வளமிக்க 53

குவளைத் தடவா விகுலா வருணைச்
சிவனைப் பலசித் தர்களுக்(கு) அனையாம்
அவளைப் புணர்அண் ணலைநண் ணுகிலார்
கவலைப் பிணிகொண் டுகயங் குநரே.

குவளைதடவாவி - நீலோற்பல மலரும் பெரிய நீர்க்குளம். 54

கயமா முகனைக் கடியக் களிரு
வியனர் பிடிமே விவிநா யகனைப்
பயனீள் மலிபா ரில்அளித் தவர்வாழ்
உயர்சோ ணவரைக் கெதிர்ஒ தரிதே.

கயமாமுகன் - யானைமுக அசுரன், களிரு - ஆண்யானை வடிவாகி, பிடிய தன் உருவுமை என்ற தேவாரம் காண்க. 55

ஓதக் கடலோங் கருலுதுலகின்
மீதக் கினியா கிவிளங் குமலை.

நாதர்க் கிருநால் வர்கள்எய் தியதால்
வாதச் சமயங் கள்மடங் கியதே

ஓதக்கடல் – குளிர்நீர்மிக்க கடல். ஓங்கல் உருது – நீர்மிகாத படி, இருநால்வர் – திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மணி வாசகர், சமய குரவர் 4. மெய்கண்டார், அருள்நந்தி, மறைஞான சம்பந்தர், உமாபதியார் சந்தான குரவர் 4 இவ்விரு பகுதியானவர் களால் புறச்சமயிகள் அடங்கினரென்பதாம். 56

மடமா தர்மயக் கம்மிகுந்(து) அவர்தம்
தடமா மலர்தஞ் சமெனத் தவியேன்
படமா டியபாம் பணிவாய் அருணைத்
திடமால் வரைமீ துறசிற் பரனே

திடமால்'வரை - உறுதியான பெரிய மலை. 57

பரவும் தவர்பா வமறக் களைவான்
வரமிஞ் சியவாய் மலரைந் துடையான்
உரகம் புனைவான் உறுதென் னருணைக்(கு)
இரவின் றியிலங் கியதோர் மலையே

களைவான் – களையும் பொருட்டு. வாய்மலர் ஐந்து – சிவன் திருமுகம் ஐந்து, அவற்றுள்ள வாய் ஐந்து என்க. நெருப்பு மலை யானதால் இரவில் ஒளியே காணு மென்பதாம். 58

மலையா கியவிற் கொளும்வண் மையினன்
அலையா றமரும் சடையான் அருணைக்(கு)
உலைவே துமிலா துயர்சீர் உறல்கண்(டு)
இலைவேல் இறையா னையொடின் புறுமே

அலை ஆறு - அலைகளையுடைய கங்காநதி, இலைவேல் - இலை போன்ற வேலுடைய, இறை-முருகன், யானையொடு கணபதியுடன் மகிழ்ந்திருப்பான். 59

இன்புற் றிமையோர் களிருப் பதுவேட்(டு)
அன்புற் றழு(து)அக் கமளித் தபிரான்
வன்புற் றுயர்வாள் மழுவான் அருணை
முன்புற் றெவர்முத் தியுறு தவரே

அக்கம் - உருத்திராக்கம் – அழுதல் – கருணை மிகுதியால் எய்தியது. 60

## கலி விருத்தம்

தவளவாள் நகைமினர் தகைநினைத் தலமரும்
பவமொழிந் துன்னையே பரவுசீர் அருள்வையோ

அவமுறூர் மருவுதென் அருணையங் கோயிலுட்
சிவபிரா னேநெடும் செஞ்சடைச் சித்தனே

தவள - வெண்ணிறமான. வாள்நகை – அழகிய பற்கள். 61

சித்தர்வாழ் வெட்டும்நின் றிருவருட் டிவலையென்(று)
உத்தமச் சுருதியால் உணர்வதும் பிழைகொலோ
மத்தமும் புனலும்வான் மதியமும் புனைசடைப்
பித்தனே அருணையின் பெருமலைத் தலைவனே.

சித்தர்வாழ்வு எட்டு - அட்டமாசித்திகள், மத்தம் - ஊமைத் தம்பூ. 62

தலையில்வெண் தூவலைச் சசியுடன் புனையும்நீ
மலைதரும் புதல்வியார் மக்களோ டென்னைவைத்(து)
உலைவுறு தாளின்மற் றெருருவரும் பழிசொலார்
கலைவலார் துதிசெயும் கனல்வரைக் கடவுளே.

வெண்தூவல் – கொக்கின்இறகு, சசி - சந்திரப்பிறை, மலைதரும்புதல்வி – இமய மலையரசன் மகளான பார்வதிதேவி. 63

கடல்விடம் பருகும்நீ கடையனேன் அழுதுதீர்ந்
திடலையும் சிறுதயின் றினியபே றருளிடிற்
புடவியோர் இகழ்வரோ; பொருவிலா அருணையின்
திடமதிட் கோயிலிற் றிகழ்வுறும் தெய்வமே.

அயின்று-மனதின் உட்கொண்டு, புடவியோர் - உலகோர் 64

தெய்வமங் கையர்நடம் செயும்எழிற் சினகரத்(து)
ஐவகைக் கடவுளர்க்(கு) அரசனும் அமலனே.
மைவரும் சோணமால் வரையில்வந் தணுகினேன்
மெய்வழக் கினனெனு மிளிர்வுறப் புரிவையே.

ஐவகைக் கடவுள் - பிரமன், மால், உடுத்திரன், மயேசன், சதாசிவன் என்பவர். மைவரும் - மேகம் தங்குகின்ற. 65

புரிசடைப் பகவனே புலவருட் கருதல்கண்(டு)
எரியெழும் படிநகைத் திகலறுத்(து) இடபமாம்
அரிமிசைக் குலவுவாய் அருணைவெற் பணுகுமென்
பிரியமுற் றுதவியிப் பிழையறக் கலைவையே

இடபமாம்அரி – திருமாலான இடபமீது. 66

களையெனும் கொடியர்தம் களையறக் களைவதால்
இளையநின் புதல்வனைத் திலகுவான் யாவனோ?

வளையலம் புறுகையாள் மருவுபங் குடையவா
நளையதாம் வினைகெடும் தழல்வரைக் கிழவனே

வளை - கைவளையல் அலம்புறும் - ஒலி செய்கின்ற, கையாள் - உமையவள் 67

கிழவன்என் றருணையங் கிரியினின் றருள்செயும்
பழமைசால் பகவனே பனிவரைக் குமரிதன்
அழகுகண் டுருகுவாய்! அறுமுகக் குழவிதன்
மழலையென் றெளியனேன் வனைதமிழ் புனைவையே

கிழவன் - தலைவன், மழலை - இளமைமொழி அறுமுகன்-சிவ குமரன், அவன் மகன் தான் என்கின்றனர். 68

புனையிழைக் கொடியனுர் புணர்முலைக் (கு)உருகுபாழ்
வினையறுத் தருளமால் விடையின்மேல் வருவையோ
நனைசடைப் புனிதனே! நாவலூர் நாவலன்
வனைதமிழ்க் கவிதையாய் வளரருு மலையனே

நனைசடை – கங்கையினுல் நனைந்த சடை 69

மலயவெற் புடையகோன் மகிழ்வுறக் கரகமூ(டு)
இலகுநீர் சொரியும்நின் இயல்புணர்ந் தணுகினேன்
அலகில்சீர் பொலியநீ(டு) அருணமால் வரையினிற்
குலவுமெய்க் கடவுளே குறைபொறுத் தருள்வையே

மலயவெற்பு – பொதியமலை. கோன் – அகத்தியர். கரகம் - கமண்டலம் 70

## அறுசீர்விருத்தம்

அருள்மிகத் தரும்பெம் மானை அருணமால் வரையுள் ளானைப்
பொருள்நயக் கவிதை வேட்டுப் பூவைபால் நடந்தான் தன்னை
இருள்மலி குழலாள் பாகத் திறைவனை இறைஞ்சா தாரைப்
மருள்மலப் பிணிகள் மூன்றும் வருத்துமென் றுணர்ந்தேன் மன்னே

பூவை – பரவைநாச்சியாரிடம் தூதுசென்றது சுந்தரர்கவிதை யின்பம் காரணமாக 71

மன்னவன் முடிமேற் றுளும், வளமிகும் அருணைக் காவல்
முன்னவன் அடிகீழ்த் தங்கள் முடியும்,வைத் துயர்ந்த மேலோர்
பொன்னவன் கணவன் என்றும் பொதுமறை புகன்றோ னென்றும்
இன்னவர் போலும் பஃறே(வு) என்னவும்இங் கிலங்கு வாரே

அரசன் சிரமீது தங்கள் பாதமும், இறைவன் திருவடிக்கீழ்த் தங்கள் தலையையும் இருக்கவுள்ளவர் தவசிகள் - பெரும்புலவர்கள் பொன்னவள்-திருமகள், பொதுமறைபுகன்றோன்-பிரமன், பஃறேவு பலதெய்வம் 72

இலங்கையோன் கதறத் தாளின் எழில்விர லதனுல் ஊன்றுன்
வலங்கொள்வான் அருணைக் கோயில் வாயிலில் வடிவேற் சேயும்
துலங்குசெம் புகர்க்கை யானும் துவாரபா லகர்போல் நின்ருல்
மலங்கெடா அயன்மால் வாழ்வை வகுத்தெவண் உரைக்கலாமே

செம்புகர் – செம்புள்ளி (யானைமுகத்திற் காண்பது சிறப்பு) கையான் – துதிக்கையுடைய கணபதி. 73

உரைக்கரும் பசும்பொன் ஓங்கல் ஒருகையால் பிடித்த பெம்மான்
பரைக்கிடப் பாக மீந்த பசுபதி, பழுதில் சோண
வரைக்குள்அன் றெருநக்காற் ருேன்றி மாலயன் வழக்குத் தீர்த்தோன்
திரைக்கடல் விடமுண் ணுனேல் தேவர்தம் சிறப்பென் ணுமே.

பொன் ஓங்கல் – பொன் மலை. ஒரு கையாற் பிடித்தல் – வில்லாக, பரைக்கு - உமைக்கு 74

சிறப்புறும் அருணை மூதூர்ச் சிலம்பினை நினம்சூழ் வார்க்கு
மறப்பொடு நினைப்பும் தீர்ந்த மாதவம் பலிக்கும், அப்பாற்
பிறப்புடன் இறப்பும் நீங்கும், பெருங்கதி யடைவா ரென்று
மறப்பில்வாக் குடைய வேத மாமுனி வகுத்தா னன்றே

சிலம்பு - மலை. சூழ்தல் - வலம் வருதல். வேதமாமுனி - வியாசர். 75

நானெடு நானு மான சமரசா னந்த வாழ்க்கை
தேனெடு பாலும் போலச் சிறியனேற் கினிக்கச் செய்துஆள்
மீனெடும் இணையாம் உண்கண் மெல்லியல் விளங்கும் பாகா!
வானெடும் உரைக்கொண் ணுத வளந்திகழ் அருணை யானே.

தானெடு நானும் – ஆண்டானும் அடிமையும் ஒருமைப் பட்ட பேரின்பம்.உண் கண்–மை தீட்டிய கண். வான்–தேவருலகம். 76

ஆனினம் சொரியும் தீம்பால் அருவிசூழ் அருணைக் குன்றிற்
தேனினம் முரலும் கொன்றைத் திருத்தொடை முடித்த நாதன்
நானினந் துயருற் றேங்க நல்குர வுயர்த்து மாகில்
ஊனினம் புசிப்பார் தங்கள் உவகையும் உயரு மன்றே.

பாலருவி - முலைப்பால் தீர்த்தம் மலையில் உள்ளது. நல்குரவு – வறுமை. 77

மன்றிடை நடிக்கும் தாளால் வளமலி அருணை யூரிற்
குன்றில்நின் றருளும் பான்மை கூறினும் தேறி டாரை
வென்றிவில் மதவேள் பூவும், வேதியன் திரிகை, தானும்
கொன்றிடு மறலி தண்டும், குலைவுறப் படுத்து மன்றே.

பூ - மலர்க்கணை. திரிகை – சக்கரம். தண்டு – கதை. 78

படுத்தபுட் குரவன் போலும், பவளவான் களிறு போலும்
அடுத்தசேய் இருவர் தம்மோ(டு) அருந்தமிழ் விரகன் தன்னை
எடுத்தநின் இடத்தாள் என்னை இடுக்கிடில் இளப்பம் கொல்லோ
கொடுத்தலே தொழிலாக் கொண்டு குலவுதென் அருணைக் கோவே

படுத்த புள் - சூரனை மாமரம். புள் என்பது கொக்கு. கொக்கு மாமரமென்பதாம். குரவன் - குருநாதன். படுத்த புள் –கொன்ற பறவை. இதற்கு குறவன் எனக் கொள்க. 79

கோவைவாய்க் கவுரி பாகா! கொழுமழுப் படைக்கை யானே
ஆவையூர்ந் துலகைச் சூழ்வாய்! அருணைமா நகருள் ளானே
பாவைநீ இகழா துன்பொற் பதங்களிற் புனைவா யாகில்
தேவைபோல் அளவில் கோடி சித்திகள் செய்வேன் இன்னே.

ஆவை ஊர்ந்து – இடபத்தை வாகனமாக்கி. பாவை - பாடல் களை. 80

*எண் சீர்*

இன்னலெனும் பெருங்கடலிற் குளிக்கும் தீயேன்
இகபரசா தனங்குறிப்பார்க் கினிமை கூறேன்
வன்னமுலைப் பேதைநல்லார்க் குருகும் நெஞ்சேன்
மழவிடைமேல் உனைநாடி மகிழ்வ தென்றோ
தென்னருணைப் பதியாளும் சிவனே, கற்றூண்
திரைநீரில் மிதப்பவும்முன் செய்யும் தேவே
நின்னருளே தஞ்சமன்றி வேறொன் றில்லேன்
நினைத்தபயன் பெறுமாறு நிகழ்த்தி யாளே.

கற்றூண் கடலில் மிதந்தது திருநாவுக்கரசர்க் காக 81

ஆளாயேல் எவ்வணுய்வேன் இந்நாள் காறும்
அடியனேன் படுந்துயரம் அறியாய் கொல்லோ
தோளாண்மை அருளாண்மை இரண்டும் நல்கித்
தொழும்பரோடு இருத்தியருட் சுகத்திற் றோய்ப்பாய்
வாளாய கண்ணிஉண்ணா முலையாள் பங்கா!
வாதவூர் அடிகளுக்கா மதுரை யூரில்
வேளாய வழுதியர்கோன் கரத்தி லேந்தும்
வேத்திரத்தின் அடிகொண்டாய் வெறுத்தி டேலே.

தோளாண்மை - போர் வெற்றி. வேள் - அரசனுக்கான சிறப்பு. வழுதியர் கோன் - பாண்டியன். வேத்திரம் - பிரம்பு. 82

வெறுக்கரிய நலங்காட்டும் அருணை மூதூர்
வேதியனே இருவருக்கா வெற்பாய் நின்றாய்
முறுக்கெயிற்றுச் சமணுலகில் அமணர்ச் சேர்க்கும்
முருந்துநகைக் குருந்துணர்ந்த முதல்வா! முந்நீர்க்

குறுக்கனைதீர்ந் துயர்திருமால் பாவந் தீர்த்தாய்
குவலயத்தில் அனைவோரும் குலைச்செய் வாராம்
மறுக்கமுறப் பொருவானைக் காணு முன்னம்
மலரடிநீ யளித்தாலும் மருவி டேனே.

இருவர் – பிரமன், திருமால், முறுக்கு எயிறு - கோணலான பல், குருந்து – குழந்தையான ஞான சம்பந்தர், முந்நீர்க்குறுக்கன் – கடல் நீரைக் குறுகும்படி செய்த அகத்தியர் 83

மருமலியும் கொன்றைதும்பை கரந்தை ஆத்தி
மத்தமதி கொக்கிறகு மருவும் சென்னிக்
குருமணியே முதலையுண்ட மதலை ஈந்த
கோமானே என்னளவும் கொடுமை செய்யேல்
அருமறையோ டாகமமும் முழங்கும் தொல்சீர்
அருணையூர் அணுகியும்நான் அயர லாமோ
கருமமுத லாயமல மூன்றும் போக்கிக்
கழலிணைகட் காளாக்கிக் காத்தி டாயே

மரு - மணம். "மருவார் கொன்றை" தேவாரம். மத்தம் - ஊமத்தம்பூ மலமூன்று - ஆணவம், மாயை, கன்மமென்பன 84

காத்தகிலம் உண்டுமிழ்ந்த நெடியோன் காணுக்
கமலமலர்ப் பதம்நோவக் காட்டிலேகிப்
பார்த்தனுடன் போர்புரிந்து கணையொன் றீந்த
பசுபதியே: அமரர்குழாம் பயந்த காலம்
நீத்தநெடும் கடல்விடமார்ந்(து) அபயம் ஈந்த
நிமலனே! அருணவெற்பா நின்ற தேவே!
பூத்தமல ரேந்தியுனக் கான பூசை
புரிந்துவக்கும் ஆசைவிஞ்சிப் புலர்கின் றேனே.

நீத்த நெடுங்கடல் - நீர்ப் பெருக்குள்ள கடல், நீத்தம்-நீர் 85

தேனமரும் கொன்றையுடன் எருக்கும் பூண்டாய்!
தேவருக்கும் அவுணருக்கும் திறலீந் தாள்வாய்!
கானமலி பூஞ்சோலை நிலவுஞ் சாரற்
கனகவெற்பி லிருந்து;நெடுங் கனலா நின்றாய்!
போனகத்துக் கலையாதுன் அடியார் கூட்டம்
பொலிவதுகண் டிறுமாக்கும் புகழ்ச்சி வேண்டி
நானருணைப் பதியில்வந்தேன் கண்டாய், இன்னே
நரையேற்றிற் றுலங்கியுண்மை நவின்றி டாயே.

போனகம்-உணவு, நரை ஏற்றில்-வெள்ளை இடபத்தின் மீது
68

நவிலருஞ்சீர் ஈசானத் தொருவற் போற்றி,
நமச்சிவாய னைப்புகழ்ந்து, நால்வாய் வேழங்
கவின்மலியும் குகவேள்பாங் கொளிரும் வாயிற்
கனசிகரி வாழ்த்தெடுத்தும் கவன்றேன் கண்டாய்!
துவிதநலம் தெரித்தருளாற் கலந்து கொள்ளும்
சோதியே! அருணை நகர்ச் சுயம்பே! முன்னாள்
அவிமறுத்தோன் தலைகொய்தாய்! இரங்கி யாட்கொண்(டு)
அடியார்தம் பெருங்கூட்டத் தமைத்தி டாயே.

நால்வாய் - தொங்கும் வாய், துவிதநலம் - இம்மை மறுமை. அவிமறுத்தோன் – தக்கன். 87

அமையனைய தோளியுண்ணா முலையாள் பங்கா
ஆயிரத்தெண் கலையானே! அருணை ஈசா!
சமையமெங்கும் புகுந்(து)அவற்றின் அடியார்க் கெல்லாம்
தண்ணருட்சீர் உதவியநீ தமிய னேனை
இமையவரின் மேலாக்கி யாள்வாய் கொல்லோ!
ஈனரினும் கடையாக்கி இகழ்வாய் கொல்லோ
தமையலது பொருள்வேறின் றிலையென் பாரும்
தடுத்தெதிர்த்து வாதமிடத் தவிக்கின் றேனே.

அமை – மூங்கிலின் அடிமுனை தோளுக்கு உவமை. தமை யலது வேறின்றென்பவர் மாயாவாதிகள். 88

கின்னரிதாங் கியகரமும் சிறகும் கொண்ட
கிளிமொழியார் இசைபாடக் கிளரும் கோயில்
தென்னருணைப் பெருமானே! புலவன் ஏவத்
திருவாரூர் வீதியிற்போய்த் திரும்பும் தூதா!
கன்னல்வில்லி பொடியாக விழித்த கண்ணா!
கவிகோடி புனைந்தோனே! கனிவில் லாதேன்
சொன்னதுதிக் கிரங்கியருள் புரிந்தா யானால்
தூயபுகழ்க் கணியாகித் துலங்கு வேனே.

கின்னரி - வீணை, சிறகு உடையவர்கள், கந்தருவமாதர், புலவன் – சுந்தரர். 89

துலங்கியவாள் எயிற்(று)உலக்கைக் கணங்கள் சூழச்
சுடுகாட்டில் ஒருபாதம் தூக்கி யாடி
இலங்கிழையாள் மனம்நாணக் களிக்கும் எந்தாய்!
எழிலருணைக் கிரியானே! இமையோர் போற்றும்
நலங்கிளர்வெண் ணீற்றரசே! என்று கூவும்
நானவமாப் போகாமே நலஞ்சற் றீந்தாள்!
விலங்கினம்,ஊர் வன,பறவை யாதி உண்டு
வீங்கும்உட லோர்பலரும் வெருளு மாறே.

வாள்எயிறு – வெள்ளைப்பற்கள், கணம் - பூதகணம், வீங்கும் உடல் - பருத்த உடலம். 90

### சந்தக்கவி - கலிநிலைத்துறை

*தானதன தானதன தானதன தானதன தனதானா*

மாறுபடும் வேள்விமுயல் மாதவர்கள் தாமருவு மடவாரோ(டு)
ஊறுபட மோகினியொ டேகிவரு சோணவரை உயர்வோதார்
கீறுபடு பாதிமதி போலுமென மூவரைகள் கிளர்சீரால்
நீறுபடர் மேனியில ராதியரை யாமணுவும் நினையேமே.

மாறுபடுவேள்வி – சீவகருணைக்கு மாறுபட்ட கொலை யாகம் செய்தவர் தாருகாவன முனிவர். ஊறுபட - நிலைகலங்கும் படி மோகினியுடன் பிட்சாடனராகச் சென்றது, கீறுபடு - பிளவுபட்ட மூவரை – மூன்று கோடு, திரிபுண்டரமாக, குழைத்தநீறு தரித்த உடலில்லாதவர்களை நாம் சிறிதும்எண்ணோம். மூன்று விரல்களால் அணிவதை மூவரை என்றனர். 91

*தானனத் தந்ததன தானனத் தந்தநன தானானா*

ஏமனுக் கும்கொடிய வேதனுக் கும்கிளியில் ஏறீடார்
காமனுக் கும்பயமு ருதளிக் கும்கடவுள் காணீரோ!
தாமரைக் கண்கொளுமு ராரியொத் திங்கொளிர்கை சார்வானே!
நாமடுக் கும்பொருவில் சோணவெற் பொன்றுதினம் நாடீரே.

சார்வான் - சாரும் பொருட்டு. திருமால் போல உலகநலம் செய்வதற்குத் திருவருளையை அடைந்தேன் என்பது. கிளியேறி வருபவன் காமன் 92

*தானனத் தத்தான தானனத் தத்தான தத்தானா*

நாடனைத் திற்சோண மால்வரைக் ;கொப்பேதும் நத்தாதா
பாடல்செப் பித்தேறு நாவலர்க் குட்சேறல் பற்றேனே
சூடகக் கைப்பாவை பாகமுற் றுத்தோலு டுத்தோனே.
வேடெனச் சிற்கான மாறெனச் சிற்போகம் வீற்றேனே.

சூடகம் – ; தோளணி 93

*தத்தந்த தானதன தந்தந்த தானதன தனனானா*

விற்கொண்ட சோணகிரி யிற்றங்கி யாளுமுயர் விண்ணோனே
பொற்கொண்ட பாவலவ!னுக்கின்ப மீயவொரு பொன்னேர்வான்
இற்கொண்ட தாள்கருதி நிற்கின்ற மாதவரை எண்ணாதே
சொற்கொண்டு நாளுமிகழ் தற்கஞ்சி டார்களொடு துன்னேனே

வில்கொண்ட-ஒளியுள்ள விண்ணோன்-வெளிவடிவானவன் பாவலவன் - சுந்தருக்காக, பொன்னேர்வாள் – அழகான பரவை

நாச்சியார், இல்கொண்டதாள் – வீட்டுக்குப்போன திருவடிகள் நுன்னேன் – நெருங்கமாட்டேன். 94

*தன்னதன தனனதன தன்னதன தனனதன - தன்ன*

நுன்னரிய திருவருணை என்னுமுயர் தலமுடைய தொல்லோனே
என்னளவும் மிகநினையும் நன்னலம துதவும்வலி யில்லாயோ
முன்னறிஞர் பலர்கவிதை சொன்னபடி யருளினைகொல் மொய்யார்பூ
உன்னடியி லிடுமுவகை தன்னையுத (வு) இனிய உயிர் உய்மாறே

மொய்ஆர்பூ-வண்டுகளையுடைய மலர். இடுதல்-அருச்சித்தல் 95

*தய்யந் தனந்தனன தய்யந் தனந்தனன தானத்தா*

உய்யும் படிக்குரிமை சொல்லும்தொ ழிற்பரிய மோர்மெய்த்தேவு
ஐயும்ப யத்தொடுள மொல்குந் திறத்தையருள் ஆர்வத்தான்
மொய்யும் சிகிக்குலமும் மல்கும் குவட்டருண மால்வெற்போன்
எய்யும் கணைக்குணவு வையம்கு டிக்கும்அறல் ஏழுப்பே

மொய்-வண்டுக் கூட்டமும் சிகிக்குலம் - மயிற்கூட்டமும் மால்வெற்போன் - பெரியமலைவடிவமான சிவபிரான், எய்யும்கணைக்கு - ஏவும் அம்பான திருமாலுக்கு உணவு–உணவாவது வையம்குடிக்கும் உலகைச் சூழ்ந்த, அறல் – கடல் நீரின் ஏழ்உப்பே - எழுகடலின் சாரமே. கண்ணன் பூமிமையைத்தன் வாயிற்காட்டிய தன் கருத்து 94

*தத்தனத் தானதன தத்தனத் தானதன – தாந்தான*

உப்புடைச் சீர்ப்பொழிலில் விப்பிரக் கூட்டமதி ல்ஓங்கூர்சூழ்
மெய்ப்புகழ்க் காட்டருண வெற்பினைப் போற்றுதவம் வீண்போமோ
மைப்புயற் போற்குலவு மொய்த்துமட் டார்த்தகுழல் மான்பாகா
முப்புரத் தார்ப்பொடிசெய் அத்தமற் றேட்குகனை மோந்தோனே

உப்பு - மகளிர் விளையாட்டு, விப்பிரக்கூட்டம்-அந்தணர்குழு, மைப்புயல் போல – மொய்த்து, மட்டு ஆர்த்த குழல்-மேகம் போற் கறுத்து, வண்டு சூழும் மலரணிந்து, மணமான கூந்தல் உள்ள மான் போன்ற உமையவள், மோந்தோன் – உச்சிமுகந்தவன். 97

*தாந்த தனதன தாந்த தனதன தாந்தான*

மோந்த கரமுறு தூங்கல் முகமுறு முத்தோன்மேல்
ஏய்ந்த பகைகொடு காய்ந்த குமரனை ஏற்றேயோர்
கூந்த லுமையிடை யேன்கொள் வது?பகர், கோட்கூரு
மாந்தர் வளர்பதி யாந்தென் அருணையில் வாய்த்தோனே

மோந்த – நீரினைமுகக்கின்ற, கரம்-துதிக்கையுடைய, தூங்கல்முகம் – யானை முகம், காய்ந்த - மாங்கனிக்காக வெகுண்ட கோட்கூரு - கோள்கூருத. 98

நாத்த நனதன தாத்த தனதன - தந்நான

வாய்த்த அருணையர் ஏற்றி லநுதினம் வந்தாள்வார்
சாத்த னனைபுணர் தோட்கொள் பரர்உமை தன்பாலார்,
பார்த்தன் வழிபடு மூர்த்தி அவரருள் பண்பாலே
தூர்த்தர் குலமற மாய்க்க முயல்பவர் துஞ்சாரே.

ஏற்றில் இடப வாகனத்தில் சாத்தன். ஐயனார். அனை - மோகினி பார்த்தன் - அருச்சுனன். தூர்த்தர் - கொலை புலையுள்ளவர், 99

தந்தத் தனத்தன தந்தத் தனத்தன தத்நான

துஞ்சற் றவிர்த்தருளி மிஞ்சக் கொடுத்தமுது சொற்கேளா
வஞ்சர்ச் செருக்கும்வலி துன்றித் திருத்தியு, வைக்காதோ.
அஞ்சத் தினுக்கிணையில் பன்றிக் களப்பரிய ரத்தாவார்
நஞ்சக் களத்தரவர் தம்பொற் கழற்சரணம் நற்பூவே 100

அஞ்சம் - அன்னமாக முடி தேடச்சென்ற பிரமன், பன்றி - வராகவடி வில் அடிகாணப் போன திருமால், இவர்கள் காண முடியாதவர்.

முற்றிற்று

---

## நூற்பயன் - வெண்பா

பாடும் அருணைப் பதிற்றுப்பத் தந்தாதி
யூடு கவிஒன் றுணர்ந்தோர்க்கும் - நாடுநலம்
கைகூடும் முக்கட் கடவுளார் காட்சிதரும்
மெய்கூடும் பொய்தவிரு மே.

சிவபெருமான் திருவடிகள் வாழ்க



